உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 35 | நள - ஆடி - 10—8—76 | இதழ் 9

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. - சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## விநாயகர் வழிபாடு

அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் பொருட்டுக் கொண்டருளும் மூர்த்தங்கள் பலவற்றுள் விநாயக மூர்த்தமும் ஒன்று. விநாயக மூர்த்தமே மிகச் சிறந்ததாகும். தனக்கு மேல் ஒரு தலைவரில்லாதவர் விநாயகர் என்பது அவர் திருநாமத்தால் இனிது பெறப்படும். (வி—மேலான, நாயகர்—தலைவர்). இவர் திருமேனி ஞான மயமானது. தன்னை வழிபடும் அன்பர்களுக்கு நாளும் அருள் வழங்கும் வள்ளல். எவ்விடத்தும் நிறைந்து நிற்பவர். ஓங்கார உருவினர், எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்பவர்.

**விநாயகர் தோற்றம் :**

விநாயகர் தோற்றத்தை விளக்கும் புராணங்கள் பல. வரலாறும் பல வகைப்படும். பரமேஸ்வரனும் பார்வதிதேவியும்

ஒரு சமயம் கயிலையில் மந்திரங்கள் எழுதியுள்ள மண்டபத்தை அடைந்தனர். அங்கே எழுதப்பெற்றிருந்த பிரணவத்தைப் பார்த்தனர். அகார உகார மகாரங்களின் கூட்டொலி சமஷ்டிப் பிரணவம் எனப்படும். அவை பிரிந்து நிற்கும் நிலை வியஷ்டிப் பிரணவம் எனப்படும். சமஷ்டிப் பிரணவமாகிய அப்பிரணவம் பிரிந்து இறைவன் எழுத்தாகிய அகரம் ஆண் யானையாகவும், இறைவி எழுத்தாகிய உகரம் பெண் யானையாகவும் மாறின. இரண்டும் சேர்ந்தன. யானை முகத்தோடு கூடிய விநாயகர் தோன்றினார். இது காஞ்சிப் புராண விளக்கம். மற்றொன்று, உத்தியான வனத்தில் இருந்த சித்திர மண்டபத்தில் ஒரு பிரணவம் எழுதப்பெற்றிருந்தது. அதனை உமா தேவியார் உற்று நோக்கினார். பிரணவம் களிறும் பிடியுமாக மாறிக் கூடின. விநாயகர் அவதாரம் செய்தார். இது கந்த புராணம் காட்டும் விளக்கம். திருஞானசம்பந்த சுவாமிகளும்

"பிடியதன் உரு உமைகொள, மிகுகரியது
வடிகொடு, தனது அடி வழிபடுமவர் இடர்
கடி கணபதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில் வலிவலம் உறை இறையே"

என்ற தேவாரப் பாடலால் இக்கருத்தை நன்கு விளக்கியுள்ளார்கள்.

## உருவத்தின் தத்துவம் :

விநாயக மூர்த்தியின் திருமேனி நமது அசுத்த தேகம்போல தோல் இரத்தம் மாமிசம் முதலியவற்றாலாக்கப்பட்டதன்று. அருட்டிரு மேனியே யாகும். அருளே சத்தியாதலால் சத்தித் திருமேனி யெனலுமாகும். அவருடைய திருவுருவம், யானை முகமும் மூன்று கண்களும் இரு செவிகளும் ஐந்து கரங்களும் ஒரு பெரிய வயிறும் இரு குறுகிய திருவடிகளும் கொண்டது. யானை முகம் இப்பெருமான் பிரணவ வடிவினன் என்பதை விளக்கும். ஐந்து கரங்கள் பஞ்ச கிருத்தியத்தைச் செய்யும் ஆற்றலுடையவன் என்பதை உணர்த்தும். மூன்று விழிகளும் சோம சூரிய அக்னிகளை உணர்த்தும். விசாலமான இரு செவிகளும் ஆன்மாக்களை மலவாதனை தாக்காமல் காத்து வினை வெப்பத்தைப் போக்கியருளும் எனும் உண்மையை உணர்த்தும். பெரு வயிறு, சர்வ ஜீவ உற்பத்திக்கும் கர்ப்பஸ்தானமாய் எல்லா அண்டங்களையும் உயிர்களையும் தன்னுள் அடக்கியிருக்கிறது என்னும் தத்துவத்தை உணர்த்தும். யானை முகம் பார்க்கப் பார்க்க விருப்பத்தை உண்டுபண்ணும். குழந்தை

களுக்கு யானையைக் காண்பதில் அலாதிப் பிரியம். எனவே ஆன்மகோடிகளும் எத்தனை முறை கஜானனைப் பார்த்தாலும் சலிப்படையமாட்டார்கள் என்பதை உணர்த்தும்.

## விநாயகரின் பழமை :

வேதங்களுள் ரிக் வேதம்தான் மிகப் பழமையானது அதில் "கணானாம்த்வாம் கணபதிம் அவாமஹே" என்று கணபதி பேசப்படுகிறார். கணங்களுக்குத் தலைவர் கணபதி. இவர் 'பிரம்மணஸ் பதி' என்றழைக்கப்படுவர். இன்னும் தைத்ரீய ஆரண்யகத்தில் இறைவனைத் 'தந்திந்' என்று கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் 'தந்தத்தை உடையவர் என்பதாகும். ஆகவே இச்சொல் விநாயகரைக் குறிப்பதே எனலாம். கணபதி காயத்திரி மந்திரத்திலும் "தந்தோ தந்திந் பிரசோதயாத்" என்று 'தந்திந்' என்ற பெயர் குறிப்பிடப்பட்டிருப்பது மேற்சொன்ன பழமையை வலியுறுத்துவது காண்க. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த நக்கீர தேவரால் அருளிச்செய்யப் பெற்ற திருமுருகாற்றுப்படை வெண்பா ஒன்றில் முருகப்பெருமானை 'ஒருகை முகன் தம்பியே ' என்று பாடியிருக்கிறார். ஒருகை முகன், ஏக தந்தனை விளங்கும் விநாயகப் பெருமானையே குறிக்கும். இன்னும் சுமார் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன் னிருந்ததாகச் சொல்லப்படும் திருமூல நாயனர் அருளிச்செய்த திருமந்திரத்தின் முதற் செய்யுளாக விளங்கும் பாடல்,

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்துஅடி போற்றுகின் றேனே.

விநாயகப் பெருமான் வணக்கமாகும் சீன, ஜப்பான், ஜாவா முதலிய நாடுகளிலும் விநாயகர்வழிபாடு நடைபெற்றுவருகிறது. எனவே விநாயகப் பெருமானது பழமை தெற்றென விளங்கும்.

## விநாயகசதுர்த்தி :

விநாயகப் பெருமானுக்குரிய விரதங்கள்மூன்று. ஒவ்வொரு வாரத்திலும் வரும் வெள்ளிக்கிழமையும், விநாயகசஷ்டியும் ஒவ்வொரு மாதத்திலும் வரும் வளர்பிறைச் சதுர்த்தியும் ஆகும். சிறப்பாக ஆவணி மாத வளர்பிறைச் சதுர்த்தியன்று வரும் சதுர்த்தியையே மிக முக்கியமாக மக்களெல்லோரும் 'விநாயக

சதுர்த்தி' எனக் கொண்டாடுகிறார்கள். ஒரு சமயம் உமாதேவியார் விநாயக மந்திரமாகிய ஏகாக்ஷரமந்திரத்தை உபதேசமாகக் கேட்டுப் பிள்ளையாரை உபாசித்து வந்தார். விநாயகர் ஆறுதிருக்கரங்களோடும், யானைமுகத்தோடும் வெண்ணிறமான குழந்தையாகப் பாலசந்திர விநாயகர் என்ற திருப்பெயர் தாங்கி உமாதேவிக்கு மகனாகத் தோன்றினர். அந்நாள் ஆவணி வளர்பிறைச் சதுர்த்தியும், விசாக நட்சத்திரமும், சோமவாரமும் சிம்மலக்கினமும் கூடியசுபதினமாம். ஆதலால் ஆவணி சதுர்த்தி மிக மேலான தெனப்படுகிறது.

## வழிபாடு :

விநாயகப் பெருமானைப் 'பிரமன், விஷ்ணு உருத்திரர் ஆகிய மும்மூர்த்திகளும் உபாசித்தனர். உமாதேவியார் பூசித்தார். அகத்தியர் முதலான முனிபுங்கவர்கள், இருடிகள் முதலியோரும் பூசித்துப்பேறு பெற்றனர்' என்று புராணங்கள் கூறுகின்றன. எனவே மக்கள் பூசிக்க வேண்டியது மிக மிக அவசியம் என்பது சொல்லாமலே விளங்கும். விநாயக சதுர்த்தியன்று புற்று மண்ணினால் விநாயகப் பெருமானின் திருவுருவம் அமைத்து அதில் விநாயகரை மந்திரம், பாவனை, கிரியைகளால் எழுந்தருளச்செய்து, அபிஷேக அலங்காரஞ்செய்து நிவேதனப் பொருள்கள் வைத்துப்போற்றி வழிபடுதல் முறையாகும். அவர்க்குகந்த மலர்கள் அம்பை, வன்னி எருக்கு அறுகு, கொன்றை முதலியனவாம். நிவேதன வகையில் அப்பம், மோதகம், எள்ளுருண்டை, அவல், பொரி, கரும்பு, விளாம்பழம் முதலியன சிறந்தனவாம். இவ்விதம் பெருமானை வழிபட்டு மறுதினம் உத்வாசனம் செய்து அவ்வடிவத்தைத் திருக்குளத்திலோ அல்லது புண்ணிய நதியிலோ விட்டுவிடவேண்டும்.

## இவ்வுருக்கொண்ட காரணம் :

யானை முகத்தையுடைய கயமுகாசுரன் என்பவன் சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றித் தான் தேவர் மனிதர் முதலியவர்களாலும் பூதம், ஆயுதம் முதலியவற்றாலும் இறவாதிருக்க வரம் பெற்றுத் தேவர்களைத் துன்புறுத்தினன். தேவர்களின் வேண்டுகோளை நிறைவேற்றத் தேவ, மனித, விலங்கு முதலிய உருவெலாங் கலந்த இத்தோற்றத்தை மேற்கொண்டு தனது வலது தந்தத்தையே ஆயுதமாகக்கொண்டு கயமுகாசுரனைச் சங்கரித்தார் விநாயகர். இதற்காக எழுந்ததே இவ் யானை முகத் திருவுருவம்.

### பெருச்சாளி வாகனம் :

கயமுகாசுரன் வரம் பெற்றவனாதலால் பழைய யானை முக உருவத்தை விடுத்துப் பெருச்சாளியாக வந்து போர் செய்தான். அதனை அடக்கித் தனது வாகனமாக்கிக் கொண்டார் விநாயகர்.

### மூத்த பிள்ளையார் :

எல்லாம் வல்ல சிவ பரம்பொருளிடமிருந்து முதலில் உண்டாகியது ஓம் எனும் பிரணவ நாதமேயாகும். அந்த ஓம் எனும் பிரணவ ஒலியின் வரிவடிவமே விநாயகரின் திருவுருவமாம். இறைவனிடமிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப்பிரணவமேயாதலால் சிவபிரானது மூத்தப்பிள்ளையார் என்றும், 'பிரணவ கணபதி' என்றும், ஓங்கார ரூபன் என்றும் விநாயகர் அழைக்கப்படுகிறார்.

### ஓங்கார பிரணவம் :

விநாயகர்உருவத்தில் ஒடிந்தகொம்புஉள்ள இடம் 'ஓ' என்ற எழுத்தின் மேற்சுழி தொடங்கும் இடமாகும். இவ்வெழுத்து அங்கிருந்து தொடங்கி, வலக்கை வழியாகக் கிரீடத்தைச் சுற்றி இடது கையிலுள்ள பாசம் வரையில் திரும்பி வந்து நெற்றிப் பொட்டு வரையில் போய்த் துதிக்கை வழியாகக் கீழ் இடக்கை வந்து கால்வரை இறங்கும். இடதுகையும் மோதகமும் 'ம்' என்ற எழுத்தைக் குறிக்கின்றது. எனவே விநாயகர் திருவுருவம் ஓங்கார சொருபம் என்பது தெளிவாம். யானையின் குரல் ஒலி பிரணவ ஒலிபோன்றிருத்தலின் விநாயகர் யானை முகங் கொண்டார் என்பதும் கவனத்திற்குரியது

விநாயகருக்கு மிக உகந்த விநாயகசதுர்த்தி விழா நாள் ஆவணிமீ 12உ (28-8-76) சனிக்கிழமை வருகிறது. அன்பர்கள் அனைவரும் பிள்ளையாரைத் தங்கள் தங்கள் இல்லங்களில் எழுந்தருளுவித்து வழிபட்டுப் பயன்பெறுவார்களாக.



குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில்

ஸ்ரீ திருநிலைநாயகிக்கு நிகழ்ந்த புஷ்பாஞ்சலிக்குப் பின்னர்

சீகாழிக்கோவைக் கல்லெழுத்தைத் திறந்துவைத்து

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

30—1—76

பூந்தராய் :

"பந்துசேர் விரலாள் பவளத்துவர் வாயினாள்
 பனிமாமதி போன்முகத்
தந்தமில் புகழாள் மலைமாதொடும் ஆதிப்பிரான்
வந்துசேர்விடம் வானவரெத்திசை யுந்நிரைந்து
 வலஞ்செய்து மாமலர்
புந்தி செய்திறைஞ்சிப் பொழி பூந்தராய் போற்றுதுமே"

இந்தப்பாடல் இத்தலத்து இறைவன்மீது இங்கு அவதாரம் செய்தருளிய திருஞானசம்பந்தர் பாடியருளிய பாடலாகும். அம்மையும் அப்பனும் எழுந்தருளியுள்ள இத்தலத்திற்குப் 'பூந்தராய்' என்று பெயர் வழங்குகிறது. வானவர்கள் பூமாரி பொழிந்ததால் 'பூந்தராய்' என்ற பெயர் ஏற்பட்டது. அதற்கேற்ப இன்று திருநிலைநாயகி அம்மைக்குப் புஷ்பாஞ்சலி நடைபெற்றது. அதனைக் கண் குளிரக் கண்டு களித்தோம். இது திருஞானசம்பந்தர் அவதரித்த தலம். அவர் பிரம தீர்த்தக் கரையில் தன் தந்தையாரைக் காணாது அழுதபோது அம்மையார் எழுந்தருளினர்; ஞானசம்பந்தருக்குச் சிவஞானம் கலந்த திருமுலைப்பால் தந்தார். அம்மைதான் தந்தாலும் அப்பன் உத்தரவு இன்றிக் கொடுக்க முடியுமா? இன்று முதலியார் அம்மைக்கு மலர் வழிபாடு செய்தார். அவராகவா செய்தார்? இவ்வாறு செய்யுமாறு திருவருள் - இறையருள் அவரைத் தூண்டியது; அவர் செய்தார்.

**திருவருள் இயக்கம் :**

உலகியலை நன்ருக உணர்ந்தோர்க்கு இது விளங்கும். நமது பிரதமர் இந்திரா காந்தியையே எடுத்துக்கொள்வோம். உதாரணத்திற்காக இதனைக் கூறுவது பொருந்தும். அவர் நாட்டில் நெருக்கடி நிலையை அறிவித்தார். இதைச்செய்யும்படித் தூண்டியது இறைவன் திருவருள். அலகாபாத் நிகழ்ச்சி இதற்குக் காரணமாக அமைந்தது. பிரதமரை இயக்கியது இறையருளே என்பதைக் காட்ட இதைக் கூறுகிறேம்.

எல்லாச் சமயங்களும் மக்களுக்குத் தேவையே. உதாரணமாகத் துவக்கப்பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரிகளில் மாணவர்கள் படித்துக்கொண்டிருக்கின்றனர். மேல் நிலையில் படிப்போர்க்குக் கீழ்நிலைக் கல்வி தேவையில்லை என்று கூறுவதில்லை. அதுபோல அவரவர் கொள்கை உயர்வாக இருக்கலாம். சமயம் உயர்ந்ததாக இருக்கலாம். ஆனல் மற்றசமயம் தாழ்ந்தது என்று கூறக்கூடாது. தேவை இல்லை என்று கூறக் கூடாது. எல்லாச் சமயங்களும் நமக்குத் தேவைதான்.

கடவுளைக் காட்ட முடியுமா ?

இன்று அம்பாளுக்கு அர்ச்சனை நடந்தது. புஷ்பாஞ்சலி செய்யப்பட்டது. திருமுலைப்பால் கூட்டத்தையே அருணசலமுதலியார் இங்குக் கூட்டிவிட்டார். இக்கூட்டம் சிலருக்குப் பிடிக்கும். இதனைப் பிடிக்காதோர் பலர் உண்டு. கடவுள் உண்டா? இல்லையா? என்று கேட்கின்றனர். விஞ்ஞான ரீதியில் இதனைக் காட்ட முடியும். ஒருவர் கடவுளைக் காட்ட முடியுமா என்ருர். ஒருவர் காட்டுகிறேன் என்ருர். இதற்கு எதிர் சவால் இந்த நாட்டிலேயே ஒருவர் விட்டார். அன்பே கடவுள் என்றெல்லாம் காட்டக் கூடாது. சென்னைக் கடற்கரையில் இலட்சக் கணக்கான மக்கட்கு முன்பு காட்ட வேண்டும் என்ருர். இறைவனைக் காட்டுகிறேன் என்றவர் 'கற்றறிந்த நீதிபதிகளை நடுவராக அமைத்தால் காட்டலாம்' என்று கூறினர்.

கடவுளை யாருக்குக் காட்டுவது என்பதில்தான் வேறுபாடு. கடவுள், கடவுள் தத்துவம் என்பது பற்றி 20 வினக்கள் கேட்டிருந்தார் ஒருவர். அதற்குப் பதில் எழுத ஏற்பாடு செய்யப்பட்டது; ஒரு புலவர் '' கடவுளை எல்லோருக்கும் காட்டமுடியாது.

இவ்வினுவை சிலர் நம்மை மடக்க வேண்டும் என்றும், தாம் தான் படித்தவர் என்றும் எண்ணிக் கேட்கின்றனர். அவர்களுக்கு இதுபற்றி விளக்கம் கூறுவது "விழலுக்கு இறைக்க நீர் போலாகி விடும்." இறைவனை உணர்வதற்குரிய பக்குவமும் ஈடுபாடும் இருந்தால்தான் கூறமுடியும். நம்மைச்சோதிக்கவேண்டும் என்று கேட்பவருக்கு நாம் பதில் கூறத்தேவை இல்லை" என்றார்.

காண்பதல்ல ; உணர்வது :

கடவுளைக் காட்டுவதற்கு நமக்குத் தெரிந்த வழியில் ஒன்று சிந்தித்துப் பார்த்தோம். அது எப்படி? உதாரணத்திற்கு ஒன்று கூறலாம். விஞ்ஞானம்பற்றி (Science) அறிய அதன் அரிச்சுவடி தெரிந்திருந்தால்தான் முடியும். இன்னின்ன பொருளுடன் இன்னின்ன பொருள் சேர்ந்தால் இன்னின்ன மாறுதல் (Chemical) ஏற்படும் என்று கூறுவர். நேரிடையாகப் பார்த்தவர் இதனை அறிவர். பார்க்காதவர் 'என்ன ஐயா!' ஏமாற்று வித்தையாக இருக்கிறது.'' என்பார். ஹைடிரஜன் பாம் இருக்கிறது. அதை எப்படிச் செய்தார்கள்? அது போலத்தான் சமயமும் அனுபவத்திற்குரியது. சமயம் – கண்ணுக்குப்புலனாகாத ஒன்று ஆகும். திருமூலர் கடவுளைக் காட்டமுடியாது; ஆனால் உணர முடியும் என்றார்.

"உணர்ந்தார்க்கும் உணர்வரியோன் தில்லைச் சிற்றம்பலவன்"

"உணர்ந்தமா முனிவர் உம்பரோடு."

என்று மணிவாசகர் கூறுகிறார். பெரிய மகான்களாலேயே காட்ட முடியாத ஒன்றை நாம் காட்டுவது எப்படி? 'உன்னுடைய அனுபவத்திற்குக் கைவந்த ஒன்று உண்டு. அனுபவித்துக் கொள். அதற்கு மேலும், இருக்கிறதா? முற்றிலும் கண்டாயா" என்றால் கூறமுடியாது.

நாம் செய்யும் தவறு :

மாணிக்கவாசகர் கண்டேன் என்றும் காணவில்லை என்றும் கூறுகிறார் அப்படி என்றால் மாணிக்கவாசகர் முன்னுக்குப்பின் முரணாகவா கூறியுள்ளார்? என்று கேட்கலாம். ஒவ்வொரு துறையிலும்முழுமையான அறிவைப்பெற்ற எவரும் இல்லை. எல்லோரும் அரைகுறைதான். நம் வீட்டுப்பிள்ளைகளில் 100க்கு 60 விழுக்காடு மதிப்பெண் பெற்றோரையே கெட்டிக்காரர் என்போம் 100க்கு 100 எல்லாப் பாடங்களிலும் மதிப்பெண் எடுப்போரில்லை கணக்குப் பாடத்தில் எடுக்கலாம் என்பர். அதுபோல எல்லாத்துறையிலும்

முழுமையான அறிவைப் பெற்றவர் எவருமில்லை. பெரியவர்களைக் குறை கூறக்கூடாது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் போன்றோர் இறைவனை முற்றிலும் உணர்ந்ததாக அவர்களே சொல்லவில்லை. அது அவர்கள் தவறில்லை. அதனைத் தவறாகப் புரிந்து கொண்டது நம்முடைய தவறாகும்.

மாணிக்கவாசகர் " கண்ணால் யானும் கண்டேன் காண்க " என்று கூறியுள்ளார். பின்னர் அவரே " கேட்டறியோம் உன்னைக் கண்டறிவாரை " என்றும் கூறியுள்ளார். இவற்றைத் தனித்தனியாகப் படித்தவர் என்ன கூறுவார்? கண்டேன் என்கிறார்; அவரே காணவில்லை என்கிறார். அவரை எப்படி நம்புவது என்பர். தேவாரம், திருவாசகங்களை முற்றிலும் உணர்ந்து படித்தோர் இல்லை. ஓரளவாவது உணர்ந்து படித்தோரால்தான் இவற்றை அறியமுடியும். இறைவன் திருவருள் இருந்தால்தான் இவை புரியும்.

அனுபவ உண்மை :

' கண்ணால் யானும் கண்டேன் காண்க ' என்பது எதுபோல் என்றால் சென்னையைமுழுதும் உணர்ந்தவரிடம் முருகப்பமுதலித் தெரு எங்குள்ளது என்று கேட்க அவர் தெரியவில்லை என்றால் அவருக்குச் சென்னையே தெரியாது என்பது பொருள் அல்ல. கடலைக்கண்டவர் உண்டு. அதில் குளித்தவர் உண்டு; கடலெப்படி இருக்கும் என்றால் ஓரளவு அனுபவத்தால்தான் கூறமுடியும். முற்றிலும் தெரியுமா? கடலின் நீளம், அகலம், ஆழம், விளை பொருள்கள் என்று கேட்டால் கூற முடியாது. அது போலக் கடவுளைத் தெரியும், அனுபவித்துள்ளேன், என்பவரிடம் 'எப்படி இருப்பார்' என்று கேட்க முடியாது ஆண்டவனைத் தன் உணர்வினால் அனுபவித்தவர்கள், கண்டவர்கள், ஞானிகளும், சித்தர்களும் ஆவர். இந்தக் கண்ணால் அல்ல, ஞானக்கண்ணால் கண்டனர். ஞானமே கண்ணுக்குத் தெரியாதபோது ஞானமாக விளங்குகின்ற இறைவனை எவ்வாறு ஊனக் கண்ணால் (ஊன் - தசை) காண்பது?

வளர்ந்தால் காணலாம் :

ஞானசம்பந்தரிடம் உனக்குப் பால்கொடுத்தவர் யார்? என்று கேட்டவுடன் " தோடுடைய செவியன் " என்று உணர்ந்து சொன்னார் ஞானசம்பந்தர். தந்தையாருக்குப் புரியவில்லை-பிள்ளை அடையாளங்களுடன் காட்டுகிறார்,

"தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளங்கவர்கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே"

என்று அவருக்குக் கூறுகிறார். வயது முதிர்ந்தும் தந்தையாரால் அதனைக் காணமுடியவில்லை. காரணம் என்ன? பிள்ளை 'ஞான சம்பந்தர்' ஆனவுடன் ஞானக்கண்ணால் கண்ட அக்காட்சியினைத் தம்முடைய ஊனக்கண்ணால் தந்தையால் காண இயலவில்லை. ஞானசம்பந்தரைப் போல நாமும் அறிவு (ஞானம்) பெறுவோமானால் கடவுளைக் காணமுடியும்.

கருணைக் கடல் :

பரமேசுவரனைக் 'கிருபாசமுத்திரம்' அதாவது கருணைக் கடல் என்பர். கருணைக் கடலான இறைவனோடு இணைந்து மகிழ்ந்தவர்கள், பேரின்பம் அனுபவித்தவர்கள் நூற்றுக்கணக்கானவர் அல்லர், இலட்சக்கணக்கானவரல்லர், கோடிக்கணக்கானவர் ஆவர். ஒருவராவது திரும்பி வருவாரா? நடராஜப் பெருமானின் ஆனந்த எல்லையில் அகப்பட்டவர்கள் திருப்பி வருவார்களா? ஆண்டவன் ஆணை இருக்குமானால் வருவார்கள்; அப்படி வந்த குழந்தைதான் ஞானசம்பந்தர். ஆண்டவன் ஆணை இல்லை என்றால் அவர் வரவேண்டிய அவசியம் இல்லை. ஆண்டவன் ஆணை இல்லையென்றால் மூன்று வயதில் எப்படி ஞானப்பால் கிடைக்கும்?

கடலை நாம் எப்படி அனுபவிக்கின்றோமோ அதுபோலக் கருணைக் கடலான இறைவனையும் தகுதிவாய்ந்த எல்லா உயிர்களும் அனுபவிக்கலாம். உலகம் எல்லாம் இறைவனுக்குட்பட்டது. இதனை 'வியாப்பியம்' என்பர். அவன் வியாபகமாக இருக்கிறான். அவனுக்குள் நாம் அடங்கியிருக்கிறோம். அந்த ஒரு நிலையில் கடலை அனுபவிப்பதுபோல் இறைவனை நாம் அனுபவிக்கலாம். முற்றிலும் அனுபவிக்கவோ உணரவோ இயலாது. இதனைத் திருக்களிற்றுப்படியார்,

"கடல் அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
கடல் அளக்கல் ஆகாதாற் போல"

என்று குறிப்பிடுகிறது. இவற்றையெல்லாம் நினைத்தால் உலகயலில் நாம் அனுபவிக்கின்ற இன்பத்தை எடுத்துக்காட்டினால்தான் நாம் உணர்வோம்.

## அகக்கண்ணும் புறக்கண்ணும் :

உலகியலில் இருக்கின்ற இன்பத்தை அதிலும் தலையாய இன்பத்தைச் சுட்டிக் காட்டினால்தான் மக்கள் இதனை உணர்வர். நாயன்மார்களும் ஆழ்வார்களும் அகத்துறைப் பாடல்களை ஏன் பாடினார்கள் என்றால் இதைச் சொல்லித்தான் அதைப் புரிய வைக்கவேண்டும் என்பதற்குத்தான். கண்டதைக்கொண்டு காணாததைவிளக்கினர்கள். இறைவனைக் 'கோடிசூர்யப்பிரகாசன்' என்பர். கண்ணுக்குப் புலப்படும் சூரியனைக்கொண்டு காணப் படாத கடவுளைவிளக்குவதுபோலநமக்குக் கண்டதைக்கொண்டு காணாததை உணர்த்துகின்ற ஒரு முறையில் பெரியவர்கள் உணர்த்தியிருக்கிறார்கள்.

ஒருமுறை அல்ல இருமுறையல்ல நாலாயிரம்முறை எடுத்துக் கூறினாலும் சிலருக்கு எதுவும் ஏறாது. இதனைக் களிமண் மூளை என்பர். களிமண் பூமியில் நன்செய் தானியமும் விளையாது; புன்செய்த் தானியமும் வளராது. அதனால்தான் கடவுளைப்பற்றி 3000 பாடல்களைப்பாடிய திருமூலர் ஒரிடத்தில் மிகவும் கோபமாக,

> " முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
> அகத்திற் கண் கொண்டு காண்பதே ஆனந்தம் "

என்று கூறுகிறார். இது புரியவில்லை என்பாருக்குப் பின் வருமாறு கூறுகிறார்.

> " மகட்குத் தாய்தன் மணாளனோடு ஆடிய
> சுகத்தைச்சொல் என்றால் சொல்லுமாறு எங்ஙனே? "

என்கிறார். ஏழுவயதுக்குழந்தை பெற்றோரைப்பார்த்து நீகண்ட சுகம் என்ன என்றால் அந்த வயதுள்ள குழந்தைக்கு அதனை விளக்கமுடியுமா ? வயது வரவேண்டும். உடல் வளர்ந்தால் – உடல் பக்குவமானால் அதற்குரிய இன்பத்தை அனுபவிக்க லாம். உயிர் பக்குவமடைந்ததால் உயிரின் நாயகனாகிய இறை வனைக் 'கள்வன்' என்று கூறினார் சம்பந்தர். எனவே உயிர் தகுதியடையுமானால் அந்த ஆண்டவனை நினைந்து சம்பந்தரைப் போல அனுபவித்துக்கொண்டே இருக்கலாம். உயிர் பக்குவ மாகாத நமக்கு எத்தனை வயதானாலும் புரியாது.

## திருநாமஞ்செப்புக !

ஆண்டவன் நாமத்தை ஒருமுறை கூறினாலே போதும் என்று ஞானசம்பந்தர் கூறுகிறார். ஆண்டவன் நாமத்தை நாம்

கூறுவதைவிடப் பக்கத்தில் இருப்பவர் கூறக்கேட்டால் ஆனந்தம் என்கிறார். உலகியலில் சம்பந்தர் பெண்ணாக இருந்து கிளியைப் பார்த்து இறைவன் நாமத்தைக் கூறுமாறு கேட்கின்றார்.

" சிறையாரு மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளம்
துறையாருங் கடல்தோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே "

என்பதே அப்பாடல். மணிவாசகரும் இதைத்தான் கூறுகிறார்.

" நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் "

உடலும் உயிரும் :

இவ்வாறு மணிவாசகருக்கும் திருஞானசம்பந்தருக்கும் இறைவன்நாமத்தைக் கூறினால் இனிக்கின்றதே; நமக்கு இனிக்கவில்லையே என்றால், நாம் பக்குவம் அடையவில்லை. குழந்தையாக இருக்கின்றோம் என்பதே பொருள். நமக்கு உயிர் வளரவில்லை ; உடல்தான் வளர்த்துள்ளது. உடலையும் வளர்க்க வேண்டும் என்று திருமூலர் கூறுகிறார். ஏன் இவ்வாறுகூறுகிறார்?

" உடம்பார் அழியின் உயிரார் அழிவர் ;
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார் ;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே "

வீட்டைக் கட்டுவது அதற்குச் சுண்ணாம்பு அடிப்பதற்கல்ல; நாம் சௌக்கியமாய் இருந்து வளர்வதற்குத்தான். அதுபோல் உடலை வளர்ப்பதும் இவ்வுயிரை வளர்ப்பதற்கே. கோயில்களில் திருவிழாக்கள் செய்யப்படுவதன்நோக்கம் நம் உயிரைக் கரையேற்றுவதற்கேயாகும்.

நிவேதனம் - விளக்கம் :

நல்லதைச் செய்வதற்கு மனக்கட்டுப்பாடு வேண்டும். குருபக்தி, சிவபக்தி, அடியார்பக்தி அவசியம். சிவத்துரோகம், குருத்துரோகம், அடியார்துரோகம் இவற்றை நாம் செய்யக்கூடாது. முடிந்தால் இவற்றைச் செய்கின்றவர்களைத் திருத்த வேண்டும். இல்லை என்றால் நாம் காதாலும் அதனைக் கேட்டல்

கூடாது. 'தட்சனின்' யாகத்தைப் பார்க்கச்சென்றவர்கள் அடி பட்டதுபோல, இதுபோன்ற கூட்டத்திற்குச் சென்றால் நாமும் துன்புறநேரிடும்.

தேசபக்திக்குத் தெய்வபக்தி அவசியம். தேசம் என்பது கை கால்முதலிய உறுப்புக்கள்போன்றது. தெய்வம்என்பது இருதயம் போன்றது. உடலுக்கு இருதயம் அவசியமானது. அரசு தெய்வீ கத்தைக்காக்கவேண்டும். அது கோயில்களுக்குப் பாதுகாப்பாக இருக்கவேண்டும். கோயில்களை நம்பி நூற்றுக்கணக்கான - ஆயிரக்கணக்கான குடிகள் உள்ளனர். அவர்கள் சாப்பிடு கிறார்களே தவிர சுவாமியா சாப்பிடுகிறார்? சுவாமிக்கு நாம் அறிவிக்கின்றோம். நிவேதனம் என்றால் அறிவித்தல் என்று பொருள். எனவே கிடைக்கும் பொருள்களை ஆண்டவனிடம் அறிவித்து நீங்கள் அனுபவியுங்கள். அறிவிக்காமல் உண்டால் நமக்குத் தீங்குகள் வரும். வயலில் இருந்து நெல் கொண்டு வந்தாலும் நாம் வயலுக்கு மீண்டும் எருவிடவேண்டும். அப் பொழுதுதான் விளையும். அதுபோலப் பால், தயிர்முதலியவற்றில் சிறிது ஆண்டவனுக்கும் அபிஷேகம் செய்தல் வேண்டும்.

### விஞ்ஞான நெறியில் சமயம் :

ஜப்பானில் நெற்பயிரில் ஒருவித குருத்துப் பூச்சி உண்டாகு மாம். கடலெண்ணெய் விளக்குவைத்தால் அப்பூச்சிகள் இறந்து விடுமாம். இதனை நேரில் கண்டுவந்த சர்தார். வேதரத்தினம் பிள்ளை அவர்கள் ஒருமுறை கூறினர். நாமும் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை விளக்கு ஏற்றிவைக்கின்றோம். குப்பை மேட்டில்கூட அன்று விளக்கு ஏற்றிவைக்கின்றோம். விஞ்ஞான ரீதியில் பார்த்தால் இதுவும் நம்பயிர்களுக்கு நல்லது என்று தெரி கிறது. முன்னோரின் சம்பிரதாயங்கள் எல்லாம் விஞ்ஞானத்தை யொட்டியே உள்ளன என்பதற்கு இது ஒரு உதாரணமாகும். நெய்த்தீபம் போடுவது நல்லது. அதன் 'வைப்ரேஷன்' எங்கும் பரவுகிறது. வெளியிலும் பரவுகிறது. கோயில்கலசத்தால் அதன் அருள் ஆற்றல் வெளியில் எங்கும் பரவுகிறது. இவற்றை யெல்லாம் சிலருக்குப் புரியவைக்கமுடியாது.

### இன்பத்துறைவழி இறைமை :

கடவுளைக் காணவேண்டுமானால் நம் தரம் உயரவேண் டும். தரம் உயர்ந்தால் பிறர் கூறவேண்டியதில்லை. நாமே உணரலாம். இறைவனை ஞானக்கண்ணால் உணரலாம். உணர்வால் உணரலாம். காட்டு என்றால் எப்படிக்காட்டுவது?

இறைவன் நம்மைப்போல் இரத்தம், நரம்பு, தசை இவற்றால் ஆனவன் அல்லன். அவன் ஒளிமயமானவன். ஞானியர்கள்கண்டு தெளிந்தவற்றைத்தான் இப்பொழுது நாம் கண்டு வணங்கச் சிலைவடிவில் வடித்து அமைத்துள்ளனர். அதில் இறைவனைத் தேடமுடியுமோ என்றால் முடியாது. அம்மா என்ற சொல்லில் அம்மாவைக்காண முடியாது. அதுபோல இறைவன் என்ற சொல்லில் இறைவனைக் காண முடியாது.

இறைவன் இருப்பிடத்தை அசப்பொருள் வாயிலாகத் திருமூலர் கூறியுள்ளார். ஞானசம்பந்தரும், அப்பரும் கூறியுள்ளனர். இன்பத்துறைவாயிலாகவே இறைத்துறையைக் காட்ட வேண்டும் என்று நாயன்மார்களும் ஆழ்வார்களும் கூறுகின்றனர். இவ்வடிப்படையில் எழுந்ததே சீகாழிக்கோவை.

கோவை நூலை முதலில் பாடியவர் மணிவாசகரே. தில்லை நடராசப்பெருமானைப்பற்றித் திருக்கோவையார் என்ற நூல் இயற்றியுள்ளார். அதில்,

" ஆனந்த வெள்ளத்து அழுந்தும் ஓர் ஆருயிர் ஈருருக்கொண்டு
ஆனந்த வெள்ளத்திடை திளைத்தால் ஒக்கும் அம்பலம் "

என்று நடராசப்பெருமானைக் கூறுகிறார். ஆண்டவனும் உயிரும் உண்டு என்பதைக் கூற எழுந்தவையே கோவைப்பாடல்கள்.

சீகாழிக் கோவை :

சீகாழிக்கோவை 400 பாடல்களைக்கொண்ட நூல். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் அருமையான நூலாகப் பாடியுள்ளார். இதனை கிருஷ்ணமூர்த்தி முதலியார் திருமகனார் அருணாசல முதலியார் இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பு தன் மணையற வெள்ளி விழாவில் நூலாக வெளியிட்டார். அக வாழ்க்கைச் சம்பந்தப்பட்ட நூலானதால் தம் மனையற வெள்ளி விழாவில் வெளியிட்டார் போலும். அதில் ஞானசம்பந்தரைப் பற்றி வரும் 15 பாடல்களை இங்குக் கல்லில் பொறித்து அம்பிகையின் சந்நிதியில் வைத்துள்ளார். நல்ல காரியம். தாயாரின் சந்நிதியில் வைத்துள்ளமையால் அவரது தாய் பக்தி தெரிகிறது. ஞானசம்பந்தரைப் பற்றிய பாடல்களை வெளியிடுவதால்இன்று திருக்குருகாவூருக்கு எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தர் அதனைத் தாமும் காணவேண்டும் என்ற ஆவலால் முன்னதாகவே இங்கு எழுந்தருளிவிட்டார்.

அருட்கண் நோக்கு :

இதையெல்லாம் கண்ட சிலர் வீண் என்பர். வேளூர் முத்தையாவிற்குமயில்விசிறிபோட்டுவிசுறுவதுண்டு. 30 ஆண்டுகளுக்கு முன்பு, இதைக்கண்ட ஒருவர் கிண்டலாக ‘இறைவனுக்கு வேர்க்கின்றதா? என்று கேட்டார். அருகில் சென்று பார் என்று கூறிட அவ்வாறே சென்று பார்த்தார். அவர் கண்கள் போய்விட்டன என்று கூறுவர். அதனால் இதுபோன்ற செயல்களை ஆராய்ச்சி செய்யக்கூடாது.

“ அருளால் எவையும் பார் என்றான்— அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலேயே பார்த்தேன்
இருளான பொருள் கண்டதல்லால்—கண்ட
என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி ”

என்கிறார் தாயுமானார். எனவே இறைவனைப் பற்றிய - இறைவனுக்குச் செய்யும் சடங்குகளை ஆராய்ச்சி செய்யக்கூடாது: அருளால் பார்க்க வேண்டும்.

“ அருட் கண்ணால் நோக்காதார் அல்லாதாரே ”

என்றார் அப்பர்.

புஷ்பாஞ்சலி :

‘கல்’ வன்மையானது; மலர் மென்மையானது. ஞான சம்பந்தரைப் பற்றிக் குறிக்கும் மென்மையான பாடல்களைத் திருவாளர் முதலியார் அவர்கள் கல்லில் பொறித்துள்ளார்கள். அம்மைக்கு மென்மலரால் அர்ச்சனை செய்தார். கல்லுக்கும் மலருக்கும் நெருங்கிய தொடர்புண்டு. சாக்கியநாயனார் கல்லால் இறைவனுக்கு அர்ச்சனை செய்தார். அருணாசலமுதலியார் கல்லில் எழுத்தை எழுதுவித்து மலரால் அர்ச்சனை செய்தார். அவருக்கும் கல்லுக்கும் தொடர்புண்டு. அசலம் என்றால் அசைவற்றது என்பது பொருள். அருணம் என்றால் செம்மை. அருணாசலம் என்றால் செம்மலை என்பது பொருள். அவரும் மலைதான். அம்பாளும் மலையிலிருந்து வந்த மலைமகள்தான். முதலியார், தமக்கு மென்மையான உள்ளம் இருக்கிறது என்பதைக் காட்ட அம்பிகைக்கு மலரால் அருச்சனை செய்துள்ளார். புஷ்பாஞ்சலி இதுபோல் யாரும் எங்கும் செய்ததில்லை. புது மாதிரியாகத்தான் செய்துள்ளார். முகத்தை மறைக்கும் அளவிற்கும் மலரைச் சொரிந்துவிடுவாரோ என்று

அஞ்சினேம். இறைவியின் கடைக்கண் அருள் நமக்குவேண்டு மாதலால் அவள் முகத்தை மட்டும் வைத்து மலர்களை நிறையச் சொரிந்துள்ளார்.

## மலர் வழிபாட்டு வரலாறு :

மலர் வழிபாடு மிகப் பழமையானது. பூக்களை எடுத்து இறைவன் மீது மெதுவாகப் போடுதல் வேண்டும். இதனை ஞானசம்பந்தர்,

" நின்று மலர்தூவி இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க் கென்றும் இன்பமே "

" ஈசன் முதுகுன்றை நேசமாகிநீர்
வாசமலர் தூவப் பாசவினைபோமே "

" சித்தந் தெளிவீர்காள் அத்தன் ஆரூரைப்
பத்தி மலர் தூவ முத்தியாகுமே "

என்று பாடுகிறார்.

சிவாச்சாரியார் இறைவனுக்கு மலர்தூவி வழிபட வேண்டும். அதற்கு முறைகள் பலவுண்டு. மணம்மிக்க மலர்களைத் தூவ வேண்டும். மலர் வெப்பம் மிகுந்தது. அதனுல் மறுநாள் பால், இளநீர் அபிடேகம் செய்வர். இல்லையென்றால் வெடித்துவிடும்; மலரும் வீணுகிவிடும்.

## துன்பமும் இன்பமும் :

சீகாழிக்கோவை சிறந்த நூல். வேதநாயகம் பிள்ளை அவர்களோ பாராட்டியுள்ளார். கோவைப் பாடல்கள் புரிவது சற்றுக் கடினமே. நடந்து நடந்து பழகினல் பழக்கமாகிவிடும். அதுபோல் படிக்கப் படிக்கப் பழகிவிடும். தொடங்கும்போது துன்பம் மிகுந்திருத்தல் இயல்பே. ஆனல் ஈற்றில் இன்பம் கிட்டு வதும் உறுதியே. இத்தகைய நூலை நூலாக வெளியிட்டதோடு கல்லிலும் பதிப்பித்துள்ளார்கள். மிகநல்ல செயல். அவருக்கு மிக நல்ல மனம். எனவே அவருக்கு நல்ல காலம் இருக்கிறது என்பதை உறுதியாகக் கூறலாம். நல்ல செயலில் ஈடுபடுவோ மானல் நமக்கு நல்ல எதிர்காலம் இருக்கின்றது என்பதற்கு இது ஒருசான்று. "யானைவரும் பின்னே மணியோசை வரும்முன்னே"

நல்ல எண்ணம் முன்னே வருமானால் நல்லகாலம் பின்னே வருகிறது என்று பொருள்.

அறத்தின் ஆற்றல் :

அறச்செல்வம், அருட்செல்வம் யாராலும் கவர முடியாதவை. இதனை நீங்கள் தேடிக்கொள்ளவேண்டும். முதலியார் அவர்கள் இதனைத் தேடச்செய்துள்ளார். நல்லது செய்யாவிட்டாலும் பரவாயில்லை. கெடுதல் செய்யாதிருக்கப் பழகிக் கொள்ளுங்கள். அதுவே பெரிய தருமம். இதையே " நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும் அல்லது செய்தல் ஓம்புமின் " என்று புறநானூறு கூறுகிறது.

முதலியார் குடும்பத்தால் தீமை, என்றும் யாருக்கும் ஏற்பட்டதில்லை. நல்லது செய்தாலும் பிறருக்குத் தெரியாது செய்வார். எதையும் ஆடம்பரம் இன்றிச் செய்யக்கூடிய குடும்பம். தருமத்தின் அடிப்படையும் இதுவே. அவர்கள் செய்த தருமம் அவர்களை இவ்வூரில் நிலைத்து இருக்கச் செய்திருக்கிறது. திருநிலைநாயகி நிலையாக இருக்கச்செய்துள்ளாள். மேலும் மேலும் அவர்கள் இதனை வளர்த்துவரவேண்டும். அவர்களை இந்தஅறம் வளர்த்துவரும். திருநிலைநாயகி வளர்த்துவருகிருள்.

கடமை செய்து வாழ்வோம் :

முனிவர் நினைத்தாலும் மன்னன் நினைத்தாலும் எதுவும் நடக்கும் கோயிலுக்குரிய நிலவருவாய்களை அளக்க அரசு உதவிட வேண்டும். கோயிலுக்குரியவற்றை அளக்காமல் இருந்தால் கேடுவிளையும். கோயில் நிலவருவாயை அளந்தால் இறைவனும் உயிர்கட்குப்படியளப்பான். அறத்திலும் தெய்வ பக்தியிலும் சற்று நெகிழ்வோமானால் நம் வாழ்வும் நெகிழ்ந்துவிடும். இறைவனிடம் உள்ள அச்சமே நம் கடமையைச் செய்யத் தூண்டும்.

அறம் காக்கும் நம்மை. ஆதலால் ஆண்டவன் திருவருளை நம்பி நம் முயற்சியைத் திருவருள் வழியாகவே செய்தல்வேண்டும் இவ்வறச்செயலில் ஈடுபட்டுள்ள முதலியார் குடும்பமும் அக்குடும்பத்தின் ஒருபகுதியாக - கிளையாக இருக்கின்ற அருணாசல முதலியார் அவர்களும், இவ்விழாவில் பங்குகொண்ட அனைவரும் நலமெலாம்பெற்றுவாழ ஸ்ரீ செந்தமிழ்ச்சொக்கலிங்கப்பெருமான் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

உ

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
இருபத்தாறுவது குருமகாசந்நிதானம்

### ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

### மாத ஜன்மநட்சத்திர வழிபாடு

நிகழும் நள ஆண்டு ஆவணித்திங்கள் 8-ஆம் நாள் (24—8—76) செவ்வாய்க்கிழமை ஆயில்ய நட்சத்திரத்தன்று திரு எதிர்கொள்பாடி (மேலைத் திருமணஞ்சேரி) ஸ்ரீ மலர்க் குழல் நாயகி உடனுகிய ஸ்ரீ அயிராவதநாதர் திருக்கோயி லிலும்கீழைத்திருமணஞ்சேரி ஸ்ரீயாழினும் மென்மொழியாள் உடனுகிய ஸ்ரீ அருள் வள்ளல் நாதர் திருக்கோயிலிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பு வழிபாடு நடைபெறும். அவ்வமயம் "திருஎதிர்கொள்பாடி திரு மணஞ்சேரித் திருப்பதிகங்கள்" என்ற நூலை வெளியிட்டு வழங்கப்பெறுவதுடன் திருப்பதிகப் பாராயணமும் விரி வுரையும் நிகழ்த்தப்பெறும். அன்பர்கள் பலரும் வந்து வழிபாட்டில் கலந்து கொண்டு பயன்பெறுவார்களாக.

## மாத ஜன்மநட்சத்திர விழா

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் 26ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் மாத ஜன்ம நட்சத்திரத்தன்று திருஅன்னியூர் ஸ்ரீ பெரியநாயகி உடனுகிய ஸ்ரீ ஆபத்சகாயேசு வரர் திருக்கோயிலிலும், திருவேள்விக்குடி ஸ்ரீ பரிமள சுகந்த நாயகி உடனுகிய ஸ்ரீ கல்யாணசுந்தரர் திருக்கோயிலிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பு வழிபாடு நடை பெற்றது. தலத் திருப்பதிகப் பாராயணமும் விரிவுரையும் நிகழ்ந்தன. அவ்வத்தலத்தேவாரத்திருப்பதிகங்கள் தலவரலாற்று விளக்கங்களுடன் வெளியிட்டு வழங்கப்பெற்றன. தருமை ஆதீனப் பல்கலைக் கல்லூரி மாணவர்கள் திருக்கோயிலில் உழவாரப்பணி செய்தனர். பக்தர்கள் பலர் வழிபாட்டில் கலந்து கொண்டு வழிபட்டுப் பயன் பெற்றனர்.



சந்தானாசாரியருள் மூன்றாமவராகிய

ஸ்ரீ மறைஞானசம்பந்தர்

## குருபூஜைத் திருநாள்

27—8—76 வெள்ளிக்கிழமை

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில்

திருவாசக வகுப்பு நிறைவு விழா



தமிழ்நாடு முன்னாள் முதலமைச்சர், நல்லறங்காவலர்,
திரு. M. பக்தவத்சலம் B. A, B. L., அவர்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
திரு. ந. ரா. முருகவேள் M. A., M. O. L., அவர்கட்கு
ஆதீனச் சார்பில் பொன்னாடை போர்த்துதல்.

# திருஅன்னியூர் - திருவேள்விக்குடித் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
வித்துவான். திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம்.ஏ.

## திருஅன்னியூர்

சோழவள நாட்டில் காவிரியின் வடகரைத் தலங்களில் 22, 23 ஆவது தலங்களாக இவ்விருதலங்களும் விளங்குகின்றன.

### இருப்பிடம் :

தஞ்சை மாவட்டத்தில் மாயூரம் வட்டத்தில் சோழன் பேட்டைக்கு வடக்கே 2 கல் தொலைவில் உள்ளது திரு அன்னியூர் என்னும் இத்தலம். மாயூரத்திலிருந்து காளிவழியாக மணல்மேடு செல்லும் பேருந்துகள் இவ்வூர்வழியே செல்கின்றன. இன்று பொன்னூர் என இவ்வூர் வழங்கப்படுகிறது.

### மறுபெயர்கள் :

இத்தலத்திற்குவிகுசாரண்யம்,பாஸ்கரக்ஷேத்திரம்என்ற மறு பெயர்கள் தலபுராணத்தில் குறிக்கப்படுகின்றன. அன்னி என்பவன் ஒருசிற்ரசன்; அகநானூறு நற்றிணைப் பாடல்கள் அவனைக் குறிப்பிடுகின்றன. அன்னியின் மகள் அன்னி மிஞிலி எனப்படுவாள். அன்னி வாழ்ந்தஊராக அன்னியூர் இருக்கலாம். அன்னி, அழுந்தூர்த் திதியனோடு போரிட்ட இடம் குறுக்கைப் பறந்தலை என அகநானூறு (45, 145 ஆம்) பாடல்கள் கூறுவதால் குறுக்கைக்கு அருகில் உள்ள இவ்வன்னியூர் அன்னியினது ஊராகலாம்.

### கோயிலமைப்பு :

ஊருக்கு வடபால் திருக்கோயில் கிழக்கு நோக்கிஉள்ளது. ஒரு காலத்தில் ஊருக்கு நடுவே விளங்கிய இக்கோயில் இன்று வடக்கே ஒதுங்கியுள்ளது. கோயிலுக்கு வடபால் நெல் வயல்கள்

உள்ளன. எதிரே திருக்குளம் அமைந்துள்ளது. நீராடியவர்கள் இருந்து ஜபம் செய்யும் ஜபமண்டபம் குளக்கரையில் உள்ளது. இறைவன் கிழக்கு நோக்கியும் இறைவி தெற்கு நோக்கியும்எழுந்தருளியுள்ளனர்.

கோயில் வாயிலைக் கடந்தவுடன் நந்தியும் பலிபீடமும் உள்ளன. அதை அடுத்து மகாமண்டபம் அர்த்த மண்டபங்களோடு கர்ப்பக்கிரகம் உள்ளது.

கர்ப்பக்கிரகத்தில் மூல இலிங்கமாகிய ஸ்ரீ ஆபத்சகாயேசுவரர் எழுந்தருளியுள்ளார். கர்ப்பக்கிரக வாயிலின் தென்புறம் மகா கணபதி காட்சி தருகிறார். வடபுறம் உற்சவ விக்கிரகங்கள் பாதுகாப்புக்காக எழுந்தருளுவிக்கப் பெற்றுள்ளன.

அருள் நலம்பழுநிய ஸ்ரீ ஆபத்சகாயேசுவரரை வணங்கி வெளியே மகாமண்டபத்திற்கு வந்தால் வடபுறம் அம்பாள் சந்நிதி உள்ளது. சிறியதிருவுருவம். பெயர் ஸ்ரீ பெரியநாயகி அழகொழுகும் திருமுகத்தோடு அருள்நலம் வழங்கி விளங்கும் அன்னையைத் தரிசித்துத் திரும்பினால் அம்மண்டபத்தின் வட கிழக்குமூலையில் சனிஸ்வரன், சூரியன், பைரவர் திருஉருவங்கள் உள்ளன.

மண்டபத்தைக் கடந்து பிராகாரத்துக்கு வந்தால் தென்புறம் தலமரம் எலுமிச்சையும் அதனடியில் சிவலிங்கமும் உள்ளன.

மேற்குப் பிராகாரத்தில் விநாயகர், சுப்பிரமணியர், மகாலக்ஷ்மி திருக்கோயில்கள் இருக்கின்றன.

வடக்குப்பிராகாரத்தில் துர்க்கை, சண்டிகேசுரர் திருவுருவங்கள் அமைந்துள்ளன. கிழக்கே நவக்கிரகங்கள் விளங்குகின்றன.

## மூர்த்திகள் :

சுவாமி பெயர் ஸ்ரீ ஆபத்சகாயேசுவரர். எலுமிச்சை தலமரமானதால் விருசாரண்யேசுவரர் என்றும், அக்னி தேவருக்கு அருள்புரிந்ததால் அக்னீசுவரர் என்றும், பாண்டவருக்குக் காட்சி கொடுத்ததால் பாண்டவேசுவரர் என்றும், இரதிதேவிக்குக் கருணைபாலித்ததால் இரதீசுவரர் எனவும் வேறு பெயர்கள் தலமான்மியத்தில் கூறப்படுகின்றன.

அம்பிகையின் திருப்பெயர் பெரியநாயகி. வடமொழியில் பிருகந்நாயகி என வழங்குவர். சூரியன் திருவுருவம் சிறப்பு வாய்ந்தது. அர்த்த மண்டபத்தில் விநாயகர், முருகன், வள்ளி தெய்வயானை, சந்திரசேகரர், நடராஜர், சிவகாமி ஆடிப்பூர அம்மன், துர்க்கை முதலிய உற்சவ விக்ரகங்கள் உள்ளன.

## தீர்த்தம் :

கோயிலுக்கு எதிரே உள்ள தீர்த்தம், அக்னி தீர்த்தம், காம சரஸ், சூரியபுஷ்கரணி, வருண தீர்த்தம் எனப் பல பெயர் களுடன் வழங்கப்படுகிறது. கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகளில் இந்தத் தீர்த்தத்தில் நீராடி ஆபத்சகாயப்பெருமானை வழி படுவோர் பாவங்கள் அனைத்தும் நீங்கப் பெறுவர் என்றும் எல்லா நலன்களும் எய்தப்பெறுவர் என்றும் அரிச்சந்திரன், பாண்டவர், பானு என்ற அந்தணன் முதலியோர் நீராடி நலம் பல பெற்றுள்ளனர் என்றும் தலபுராணம் கூறுகிறது.

## தலமரம் :

தன்னை வழிபட்ட அக்கினிதேவனுக்கு எலுமிச்சை மரத் தடியில் தோன்றி இறைவன் அருள்புரிந்தார் என்று தலபுராணம் கூறுகிறது.

## தலச்சிறப்பு :

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்து இறைவனைப் போற்றிப் பாடியுள்ளனர். திருஞானசம்பந்தர் அருளிய திருஇருக்குக்குறள் திருப்பதிகமும், திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகமும் அன்பர்கள் பலரையும் அன்னியூர் இறைவனை வணங்கி அருள்பெறுமாறு அழைக்கின்றன.

' இன்பம் வேண்டுவீர், அன்பன் அன்னியூர்
நன்பொன் என்னுமின் உம்பராகவே '
(ஞானசம்பந்தர்.)

" எம்பி ரான்இமை யோர்கள் தமக்கெலாம்
இன்ப ராகி இருந்தஎம் ஈசனர்
துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்கு
அன்ப ராகிநின் றூர்அன்னி யூரரே " (நாவுக்கரசர்.)

என்பன போன்ற பாடல்கள் அன்னியூர் இறைவனின் அருள் நலக் கனிவினை நன்கெடுத்துக் காட்டுகின்றன.

சூரியன், அக்னி, வருணன், இரதி, அரிச்சந்திரன் பாண்டவர், பானுமாந்ற மறையவன் முதலானோர் இத்தலத் திறைவனை வணங்கிப் பேறுகள் பலவும் பெற்றதாகத் தல புராணம் கூறுகிறது.

பங்குனி மாதக் கடைசியில் 26 முதல் 30தேதி வரை ஐந்து நாட்கள் காலையில் சூரியபூசை இன்றும் நிகழ்கிறது. கதிரவன் காலை இளங்கதிர்களால் இறைவனைத் தீண்டி வழிபடும் இந் நிகழ்ச்சி இத்தலத்துக்குச் சிறப்புத் தருவதாகும். இவ்வூரில் திருமால் கோயிலொன்றும் உள்ளது. கரியமாணிக்கப் பெருமாள் என்பது அவர் திருநாமம்.

## திருப்பணி :

கோயில் சிதைவுற்ற நிலையில் உள்ளது. பொன்னுசர் மகா தேவ சாஸ்திரியார் முயற்சியால் 1—2—1951ல் பொதுமக்களின் உதவியோடு திருப்பணிகள்செய்யப்பெற்று மகாகும்பாபிஷேகம் நிகழ்ந்துள்ளது. கோயில், திருப்பணிகள் செய்யவேண்டிய நிலையில் உள்ளது.

## அக்னிதேவன் வழிபட்டது :

பிரமதேவனும் இந்திரனும் இறைவனைக் குறித்து யாகங்கள் பல செய்தார்கள். இறைவனுக்குச் சேர்ப்பிக்கும் பொருட்டு யாக குண்டங்களில் சொரிந்த அவியுணவை அக்கினிபகவான் அளவு கடந்து உண்டு விட்டான்; அவனை நோய்பற்றியது. உடல் மெலிந்தான். அதைக் கண்ட அவன் மனைவி சுவாகாதேவி தேவகுருவிடம் முறையிட்டாள். அவர் சொற்படி இருவரும் அன்னியூர் வந்து ஒரு தடாகத்தை உண்டாக்கி அதில் நீராடி அக்குளத்தின் மேல்கரையில் தவம் கிடந்தனர். இறைவன் எலுமிச்சை மரத்தடியில் தோன்றி அவர்கட்கு அருள்புரிந்தான். நோய் நீங்கிய அக்னிபகவான் சிலகாலம் மனைவியுடன் இத்தலத் தில் தங்கி திருவிழாக்கள் முதலியன நிகழ்த்தி இறைவனை வழி பட்டுத் தன் இருப்பிடம் சென்றான். அது முதல் இறைவன் விசுவசாரண்யேசுவரர் என்னும் தீர்த்தம் அக்னி தீர்த்தம் என்னும் வழங்கப்படுகிறது.

## இரதி வழிபட்டது :

ஒரு காலத்தில் தட்சன் மிகப்பெரிய வேள்வி ஒன்றைச் செய்தான். சிவபிரான் கூறியதையும் கேளாமல் அம்பிகை தன் தந்தை செய்யும் வேள்வியைக் காண யாகசாலைக்குச்சென்றாள்.

தட்சனால் அவமதிக்கப்பட்டாள். சிவநிந்தகனாகிய தக்கன் மகளாகப்பிறந்து தாக்ஷாயணி என்ற பெயரோடு விளங்குவதை வெறுத்து பர்வதராஜன் மகளாகப் பார்வதி என்ற பெயரோடு பிறந்து வளர்ந்தாள். சிவபிரானை மணம் புரிந்து கொள்ளத் தவமிருந்தாள். தனித்திருக்கும் சிவபிரானை அம்மையோடு இணைத்து வைக்கத் தேவர்கள் விரும்பினார்கள். மன்மதனை ஏவி மலர்க்கணை தொடுக்குமாறு செய்தார்கள். மலர்க்கணை தொடுத்த மன்மதன் இறைவனது நெற்றி விழியால் எரிந்து சாம்பலானான். அவன் மனைவி பலவாறாகப் புலம்பினாள். பின்னர் அன்னியூர் வந்து தீர்த்தத்தில் மூழ்கி இறைவனை வழிபட்டாள். மன்மதன் அவள் கண்களுக்கு மட்டும் தெரியுமாறு இறைவன் அருள்புரிந்தான். அது முதல் இத்தலப்பெருமான் இரதீசுவரர் என்ற திருநாமம் பெற்றார். தீர்த்தம் காமசரஸ் எனப்பெற்றது. இறைவன் மன்மதனை எரித்ததலமாகிய குறுக்கை இவ்வூருக்கு வடக்கே உள்ளது.

## அரிச்சந்திரன் வழிபட்டது :

அரிச்சந்திரன் தன் குலகுருவான வசிஷ்டரிடம் கௌசிக முனிவரால் தனக்குஏற்பட்ட இடையூறுகளினின்றும் நீங்கி தான் எவ்வாறு இன்பமாய் வாழமுடிந்தது என்று கேட்டான். அவர் 'விருசாரண்யம் என்னும் அன்னியூருக்கு வந்து தீர்த்தமாடி இறைவனை வணங்கியதால் எல்லா இடையூறுகளினின்றும் நீ விடுவிக்கப்பெற்றும்' என்று கூறினார். அதனால் இறைவன் ஆபத் சகாயர் என்ற பெயரும்பெற்றார்.

## சூரியன் வழிபட்டது :

மயனுடைய மகள் சூரியனின் மனைவி. மயன் தன்மகளை இழிவு படுத்திய சூரியனின் கையை வெட்டினான். சூரியன் மனைவி, தேவகுருவிடம் சென்று கையை மறுபடியும் பெறுவதற்கு வழி சொல்லுமாறு வேண்டினாள். அவரும் நிலவுலகில் திரு அன்னியூர் சென்று இறைவனை வழிபட்டால் நலம்பெறலாம் எனக் கூறினார். அவ்வாறே பகலவனும் அவன் துணைவியும் இத்தலத்துக்கு வந்து நீராடி இறைவனை வழிபட்டனர் கதிரவன் இறைவனருளால் இழந்த கையைப் பெற்றான். தீர்த்தம் சூரிய புஷ்கரணி என்ற பெயரைப் பெற்றது. இக்கதைக்கு ஆதாரமாக ஆண்டு தோறும் பங்குனி மாதத்தில் சூரியபூஜை நிகழ்ந்து வருகிறது. இவ்வூருக்குப் பாஸ்கர க்ஷேத்திரம் என்ற பெயரும் உண்டாயிற்று.

### பானு வழிபட்டது:

பானு என்ற மறையவன் காசியில் பூசனிக்காய் தானம் பெற்றான். கூஷ்மாண்டதானம் பெற்றதால் குஷ்டரோகத்தினால் பீடிக்கப்பெற்றான். அதை யொழிக்கப் பல தலங்களுக்கும் யாத்திரை போய் திருஅன்னியூரை அடைந்து தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தான். அவன் தொழுநோயகன்றது; இறைவனை வணங்கி இன்புற்றான்.

## திருவேள்விக்குடி

இத்தலம் மாயூரமிருந்து மகராஜபுரம் செல்லும் பேருந்துச் சாலையில் உள்ளது. குத்தாலம் பேருந்து நிலையத்திலிருந்து வடக்கே 1½ கல் தொலைவில் இருக்கிறது.

### பெயர்க் காரணம்:

சிவபெருமானது திருமண வேள்வி நடைபெற்ற தலம் ஆதலின் இவ்வூர் வேள்விக்குடி என்னும் பெயர்பெற்றது. அம்பிகைக்குக் கங்கணதாரணம் செய்த தலம் ஆதலின் கௌதுகாபந்தன க்ஷேத்திரம் என்றும் வடமொழியில் கூறப்படுகிறது.

### கோயிலமைப்பு:

திருக்கோயில் ஊரின் நடுவே கிழக்கு நோக்கியிருக்கிறது. கர்ப்பக்கிருகம் அர்த்தமண்டபம் மகா மண்டபம் முன் மண்டபங்களோடும் இரண்டு திருச்சுற்றுக்களோடும் கோயில் அழகுறத் திகழ்கிறது. மூன்று நிலைக் கோபுரம் கிழக்கு வாயிலை அணி செய்கிறது. கோபுரத்தைக்கடந்து உள்ளே சென்றதும் கொடி மர விநாயகர் பலிபீடம் ஆகியவற்றைத் தரிசிக்கின்றோம். கோயிலை வலம் வரும்போது வலஞ்சுழி விநாயகர் முருகன் கோயில்கள் விளங்குகின்றன. கோயிற் சுவர்களில் கல்வெட்டுக்கள் உள்ளன அவை கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர் திரு. வை சுந்தரேச வாண்டையார் அவர்களால் படி யெடுக்கப் பெற்று தேவஸ்தானத் தலவரலாற்றில் சுருக்கமாக வெளியிடப் பட்டுள்ளன. கோட்டங்களில் கருப்ப இல்லின் மேல்புறம் இலிங்கோற்பவர், சந்திரசேகரர், அர்த்தநாரீசுவரர் திருவுருவங்களும், தென்புறம் தக்ஷிணாமூர்த்தி, அகத்தியர், நடராசர், பிள்ளையார் திருஉருவங்களும், வடபுறம் பிரமதேவர் திருவுருவமும் உள்ளன.

முதல் பிராகாரத்து வடகீழ்ப்பகுதியில் அம்மன்கோயில் தெற்கு நோக்கிய திருவாயிலோடு கோயில் நுழைவாயிலை அடுத்து விளங்குகின்றது.

திருக்கோயிலின் சந்நிதிக்கு வடகீழ் மூலையில் ஒன்றும் மேற்றிசையில் ஒன்றும் ஆக இரண்டு தீர்த்தங்கள் உள்ளன.

திருமணத்துக்கு முன்பு தேவி மங்களஸ்நானம் செய்தபடியால் சந்நிதிக்கு வடகீழ் மூலையில் உள்ள தீர்த்தம் கௌதுகாபந்தன தீர்த்தம் என வழங்கப்படுகிறது.

தலச் சிறப்புக்கள் :

இத்தலத்திறைவனைத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பாடியுள்ளனர். மூன்று திருப்பதிகங்களும் திருவேள்விக்குடியையும் திருத்துருத்தியையும் (குத்தாலம்) இணைத்தே பாடப்பெற்றுள்ளன. இத்தலத்திறைவன் பகலில் திருத்துருத்தியிலும் இரவில் திருவேள்விக்குடியிலும் எழுந்தருளியிருப்பதாகத் திருஞானசம்பந்தர் திருப்பதிகம் கூறுகின்றது. இறைவன் மணவாளக் கோலத்துடன் விளங்கும் தலமாகும்.

திருமணமாகாதவர் இத்தலத்துக்கு வந்து இறைவனையும் இறைவியையும் அருச்சனை ஆராதனைகள் செய்து வழிபடின் விரைவில் திருமணம் நிறைவேறப்பெறுவர்.

இத்தலத்தோடு இதனருகில் உள்ள தேரழுந்தூர், திருவாவடுதுறை, திருத்துருத்தி (குத்தாலம்), எதிர்கொள்பாடி திருமணஞ்சேரி ஆகிய தலங்களைத் தொடர்புபடுத்தி வழங்கும் தலபுராண வரலாறு அறியத்தக்கது.

சிவபெருமான் உமையம்மையாரோடு தேரழுந்தூரில் தோன்றி வேதங்களை அருளிச்செய்து வேதபுரீசுவரராக விளங்கினார். ஒருநாள் திருமாலை நடுவராக வைத்து இறைவனும் இறைவியும் சொக்கட்டான் விளையாடினர். சக்தி வெற்றி பெற்றாள். இறைவன் அம்மையைப் பசுவாகுமாறு சபித்தனன். தேவி தன்னைத் தடுத்தாட்கொள்ளுமாறு இறைவனை வேண்டினாள். திருவாவடுதுறையில் அவ்வாறே ஆட்கொள்ளுவதாகக் கூறி மறைந்தார். இறைவி பசுவானாள். திருமால் மாட்டிடையரானார். பசுவான தேவி காடுகளில் மேய்ந்து திரிந்தாள். அப்போது ஒரு புற்றின்மீது காலடிக்குளம்புபட்டது. உள்ளே சிவலிங்க உருவாயிருந்த இறைவன் காலை உருக்கொண்டு பசுவை வெருட்டிச் சென்றார்.

பசு திருவாவடுதுறையில் திருக்குளத்தில் இறங்கிற்று. பசுவாக இருந்த பார்வதி தேவியார் பசு உரு நீங்கித் தன்னுருப் பெற்றார். தேவியை ஏற்றுக்கொள்ளுவதாக இறைவன் வாக்களித்து மறைந்தான்.

இறைவி திருத்துருத்தியில் அந்தணர் குலத் தோன்றலாகிய பரதமாமுனிவர் செய்த வேள்விக் குண்டத்தில் அவர்க்கு மகவாகத் தோன்றினார். இறைவனை மணவாளராகப் பெறக் காவிரிக்கரையில் மணலால் இலிங்கம் அமைத்து வழிபட்டு ஏழு நாட்கள் தவம் செய்தார். எட்டாம் நாள் இறைவன் வெளிப்பட்டருளினான். நந்தியெம்பெருமான் வாயிலாகத் தாம்திருமணம் செய்துகொள்ள வருவதைப் பரதமுனிவருக்கு அறிவித்துத் தாமே திருமணத்துக்கு எழுந்தருளினார். மண்ணுலகமும் விண்ணுலகமும் கண்டு மகிழுமாறு இறைவன் இறைவியைத் திருமணம் கொண்டருளினார்.

திருமணச் சடங்கிற்குச் செய்யும் மங்கலச் செயல்களைச் செய்த ஊர்கள் பலவும் அவ்வப் பெயர்களோடு இன்றும் விளங்குகின்றன. குறுமுளைப்பாலிகை தெளித்த ஊர் குறுமுளைப்பாலிகை என வழங்கி வருகிறது.

இத்தலம் கௌதுகாபந்தனம் வேள்வி வளர்க்கப்பட்டது ஆதலின் வேள்விக்குடி என வழங்கப்பெற்றது. மாப்பிள்ளையை எதிர்கொண்டழைத்த தலம் எதிர்கொள்பாடி எனவும், திருமணம் நடைபெற்ற தலம் திருமணஞ்சேரி எனவும் பெயர் பெற்றதெனக் கூறுவர்.

அரசகுமாரன் ஒருவனுக்கு மணம் புரிய நிச்சயித்திருந்த பெண்ணின் திருமணம் நிறைவேறுமுன் அவள் தாய் தந்தையர் இறக்கவே அவர் சுற்றத்தார் அவளை அவனுக்குக் கொடுக்க மறுத்தனர். அரசிளங்குமாரன் இறைவனை நோக்கித் தவம் செய்யச் சிவபிரான் அப்பெண்ணைப் பூதத்தினால் எடுத்து வரச் செய்து அவனுக்குத் திருமண வேள்வி செய்து கொடுப்பித்தருளிய தலம் எனவும் கூறுவர்.

### மூர்த்திகள் :

இறைவர் திருப்பெயர் : ஸ்ரீ மணவாளேஸ்வரர். கல்யாணசுந்தரர் எனவும் கௌதுகேசர் எனவும் வழங்கப் பெறுவர். இறைவியாரின் திருப்பெயர் ஸ்ரீ பரிமளசுகந்தநாயகி, "நாறுசாந்திளமுலை அரிவையோடு அமர்ந்தபிரான்" என ஞானசம்பந்தர்

இறைவியாரின் திருப்பெயரைக் குறிப்பிடுவர். வலஞ்சுழி விநாயகர் வெளிப் பிராகாரத்தில் எழுந்தருளியுள்ளார். இத் தலத்தில் பஞ்ச மூர்த்திகளுடன் அம்பிகையோடு விளங்கும் ஸ்ரீ கல்யாணசுந்தரேஸ்வரர் திருவுருவம் மிக்க அழகுடையதாகும்.

**கல்வெட்டுக்கள் :**

இக்கோயிலில் பழமை வாய்ந்த பல கல்வெட்டுக்கள் உள்ளன; அவற்றையெல்லாம் படியெடுத்துச் சுருக்கமாக வெளியிட்டுள்ளனர். இக்கல்வெட்டுக்களினால் அறியப்படும் சிறப்புக்குரிய செய்திகளைக் கீழே காண்போம்.

இத்திருக்கோயிலைக் கற்றளியாக எடுப்பித்தவன் முதற் பராந்தக சோழமன்னன் ஆவான். இறைவர் பெயர் கல்வெட்டுக்களில் வேள்விக்குடி ஆழ்வார், மங்கலநக்கர், ஸ்ரீகோயில்தேவர் வேள்விக்குடி உடையார் மணவாளநம்பி எனக் குறிக்கப்படுகின்றன. இறைவியார் பெயர் காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார் நாறுசாந்கிள முலை நாச்சியார் எனக்கூறப்பட்டுள்ளன. இக்கோயில் திருப்பணிகளுக்கும் பலர் உதவியுள்ளனர். திருவுருவங்களைப் பலரும் நிறுவியுள்ளனர். கர்ப்பக்கிருகத்தின் தென்பால் உள்ள தக்ஷிணாமூர்த்தி திருவுருவத்தை எழுந்தருளுவித்தவன் வளஞ்சியர்பணி செய்மகன் காத்தரேய்சிங்கம் எனப்படுவான். துர்க்கை திருமேனியை எழுந்தருளச்செய்தவன் திருவழுந்தூர் நாட்டு நெற்குப்பை உடையான் பல தேவனான பாத்திரசேகர பல்லவரையன் ஆவான். அர்த்த மண்டபத்து வாசலடியில் உள்ள மகாகாளரைச் செய்வித்தவன் தென்கரை நாட்டு ஆனிய முடையான் காசி வேப்பனாகிய மூவேந்த வேளானாவான்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

**Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.**

It was a joy and an experience to visit this temple, after many years. The atmosphere of cleanliness, purity and holiness, that this temple has preserves to this day is an experience with, cherishing. I am grateful to the authorities for the kindness and help they gave me during our visit

10—7—76. (S-d) T. V. VENKATARAMAN.

# சிவஞானசித்தியார் தெளிபொருள் விளக்கம்

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி

திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

( மலர் 35. இதழ் 7. பக்கம் 288 இன் தொடர்ச்சி )

நீர்போல நின்றுயிர்கட் களித்தி டாதே
  நெருப்பாய துயர்ப்பிறப்பில் நிகழ்ந்துநின்று
பாரோருக் களித்தபடி, வலையிற் பட்ட
  பலகலைகள் கண்டொருநீள் கலைபாய்ந்தோடி
நேரேசென் றவ்வலைக்கே நேர்ந்தா லொக்கும்;
  நீள்பாவக் குழியில் விழும் நீர்மையாகும;
ஆரோ இங் குனைஒப்பார் ! அறத்தை ஆக்கப்
  பிறந்தறம் ஆக் கினன்என்னில், அடங்கஆமே. 98

## இதன் தெளிபொருள்

'ஆதி புத்தன் பரதுக்க துக்கனாய், (மற்றைய உயிர்களின் துன்பத்தைக்கண்டு அவற்றின் பொருட்டுத் தானும் துன்பத்தை அடைபவனாய்)ப் பலபிறவிகளை எடுத்துப் பல உயிர்களுக்கு அருள் புரிகின்றான்' என்றாய். இது, நெருப்பில் அகப்பட்ட வர்களை மீட்க நீரைச் சொரியமாட்டாத ஒருவன் தானும் நெருப்பில் அகப்படுவது போலவும், வலையில் அகப்பட்டுள்ள பல மான்களை மீட்க மாட்டாமையால், ஒருமான் தானும் வேக மாகச் சென்று அந்த வலையில் வீழ்வது போலவும் ஆவதன்றி, உயிர்களை உய்விப்பதாகாது. மேலும் பிறப்பை எடுத்தால் வினையைச் செய்தே ஆகவேண்டும ஆகையால், இறைவன் பிறவி எடுப்பின், வினைக்குழியில் விழ்ந்தவனுவான். ஆகையால் இறையியல்பைக் கூறுதலில் இங்கு உன்னை ஒப்பவர் யாவர் உளர்!

'உயிர்கட்கு அறத்தைக் கூறவே இறைவன் பிறவி எடுக் கின்றான் ஆகையால், அவன் வினைக் குழியில் வீழ்தல் இல்லை' எனின் கருத்து எதுவாயினும், ஏனையோருடைய பிறப்பிற்கும்,

இறைவன் பிறப்பிற்கும் செயலில் என்ன வேறுபாடு காட்டு கின்றாய்? யாதொரு வேறுபாடும் இல்லாமையால், இங்குள்ளது அங்கும் ஒக்கும்; அங்குள்ளது இங்கும் ஒக்கும். அஃதாவது இறைவன் பிறந்து வினையைச் செய்யாமலே இருப்பின், உயிர்களும் அவ்வாறும். உயிர்கள் பிறந்து வினையைச் செய்யுமாயின் இறைவனும் அத்தகையவனே ஆவான். அதனால், பிறக்கின்ற உயிர்கள் யாவும் அறத்தைக் கூறவே பிறந்தனவாய்விடும்.

## விளக்கம்

"நீர்போல நின்று" என்பதற்குக் கருத்து நோக்கி இவ்வாறு உரை கூறப்பட்டது. கொடுமை மிகுதி நோக்கிப் பாவத்தையே சுட்டிக் கூறினராயினும், இருவினையும் கொள்ளப் படுவனவாதல் அறிக. (4)

அலகிறந்த யோனிகளில் புகுந்த தெல்லாம்
அறத்தை அளித் திடஎன்னில், அவற்றின் எல்லாம்
நிலவுவது கன்மத்தாலாகும்; அன்றி
நினைந்ததோர் இச்சையினால் நிகழ்ந்தானாகில்
உலகுதனில் உள்ளோர்க்கும் அதுவேயாகும்;
ஒருத்திவயிற் றினிலிருந்தங் குதரம் தள்ளித்
தலமதல்வந் தான்என்னில், தாயைகொன்றான்
தருமத்தை இன்றெனக்குச் சாற்றிடேலே. 99

## இதன் தெளிபொருள்

உன் இறைவன் அளவற்ற யோனிகளிலும் சென்று அவ்வப் பிறப்பை எடுத்தது அப்பிறப்பில் உள்ள உயிர்கட்கு அவற்றின் வழியில் நன்று அறத்தை உணர்த்தற் பொருட்டே என்பாயாகில், 'பிறப்புக் கன்மத்தால் வருவது' என்பது உனக்கும் உடன்பாடேயாகலின், உன் இறைவன் கன்மத்தை உடையவனும் விடுவான். 'மற்ற உயிர்கள் போலப் புத்தன் கன்மம் காரணமாகப் பிறவாமல் தானே தனது இச்சையால் சென்று பிறக்கின்றான்' என்பாயேல், மற்ற உயிர்களும் கன்மத்தாலன்றித் தம் இச்சையாலே பிறந்தனவாம் என்பாரை எப்படி மறுப்பாய்? 'புத்தன் பிறக்கும்பொழுது மற்றையோர் போல யோனிவாய்ப் பட்டுப் பிறவாமல், தாயின் வயிற்றைக் கிழித்துப் பிறத்தலால் அவன் தனது இச்சையாற் பிறத்தல் அறியப்படும்' எனின், நன்று சொன்னாய்! அறத்தை உணர்த்துதற்காகவே பல பிறப்புக்களில் சென்று பிறக்கின்ற உன் இறைவன் பிறக்கும்பொழுதே

அந்த அந்தத்தாயையும் கொல்கின்ற தாய்க் கொலைப்பாவத்தைச் செய்து பிறப்பாளுமின், அவள் பிறருக்கு உணர்த்தும் அறம் எத்தகையதாய் இருக்கும் என்பதை நான் சொல்ல வேண்டுவ தில்லை.

## விளக்கம்

"ஒருத்தி" என உயர்திணை பற்றியே கூறினராயினும் அஃறிணை பற்றியும் ஆற்றலாற் கொள்ளப்படும். 'ஆதிபுத்தன் பிறக்கும்பொழுது தாயின் வயிற்றைக் கிழித்து அவ்வழியே பிறந்தான்; அதனால் அவள் அவனை ஈன்ற ஏழாம் நாளில் இறந்தாள்" என்பது பௌத்த மதத்தில் சொல்லப்படும் வரலாறும் மற்றப் பிறவிகளிலும் அவள் இப்படித்தான் பிறக்கின்றாள்" என்பது அம்மதத்தின் கொள்கையுமாகும்.

பௌத்த துறவியாகிய 'குண்டலகேசி' என்பாள், இல்லறத்தில் இருந்தபொழுது தன்னைக்கொல்ல முயன்ற தன் கணவனைத் தான் அவனுக்கு முன்னேகொன்று, பின்பு துறவியாகி எங்கும் சென்று பௌத்த மதத்தை நிலைநாட்டினள் என்பது அவளைப் பற்றிக் கூறும் குண்டலகேசிக் காப்பியக் கூற்று. 'புத்த மதத்தலைவர்களது அற ஒழுக்கம் இவ்வாறு உள்ளது' என்பதைச் சைவாசாரியர்கள் எடுத்துக் கூறுவதுஉண்டு. (5)

அரியினொடு நரிஉழுவை யாதியாக
ஆனபோ தறம்திரிந்து கோறலாதி
பரிவினோடு செய்தனளும்; இல்லையாகில்
பசிதனக்குத் தின்பதவண் பழுதையோதான்!
கருதில்அவள் பரதுக்க துக்கனுகில்
கணவனிழந் தோர்கட்கும், கண்ணிகுத்தித்
திரியுமவர் துயரினுக்கும் இரங்கு வோன்றன்
செயல் அறத்துக் கழகியதாம் செப்புங்காலே.

## இதன் தெளிபொருள்

அறத்தை உணர்த்தற் பொருட்டுப் புத்தன் எல்லாப் பிறவிகளிலும் சென்று பிறப்பானுமின், சிங்கமாகவும், நரியாகவும், புலியாகவும், மற்றும் இவைபோன்ற கொடிய பிறவியாகவும் பிறந்த பொழுது அப்பிறவிக்கு ஏற்பப் பிற உயிர்களைக் கொல்லுதலாய பாவத்தைச் செய்து அந்த ஊனையே தின்னல் வேண்டுமல்லது வைக்கோல் புல்முதலியவற்றையோ அங்கு அவள் தின்பாள்? ("புலி, பசித்தாலும் புல்லைத் தின்னாது" என்பது பழமொழி).

இனி, புத்தன் பரதுக்க துக்கன்' என்பது உண்மையாருல் கணவனை இழந்த பெண்ணின் துன்பத்திற்கு இரங்கித் தானே கணவனுய்ச் செல்லுதலோ, பிறரைக் கணவராக ஆக்குதலோ செய்து அவள் துயரத்தைப் போக்குதல் கண்ணி' குத்திப் பறவைகளைப் பிடிப்போன் தன்பசி காரணமாகவே அவ்வாறு செய்தலால், அவனது தொழிலைக் கடியாமல் அவனுக்கு உதவுதல் இவைபோன்றவற்றைச் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்வான்" என்ருல், அவனுடைய அறம் எத்துணை அழகியதாயிருக்கும்! அவ்வாறு செய்யமாட்டான்' என்ருல், பரதுக்க துக்கனுதல் அமையாது.

## விளக்கம்

பரிவு – விருப்பம். 'தின்பதவன்' எனவும் பாடம் ஓதுவர்.

'புத்தன் பரதுக்க துக்கனுகிப் பலருக்கும் இரங்குவன்' என்பதை விளக்குதற்கு 'பெட்டைக் கழுதையொன்று காமநோயால் வருந்துவதைக் கண்ட புத்தன் அதன் துன்பத்தைப் போக்குவதற்கு ஆண் கழுதையாய்ச் சென்று கூடினுன்' என்பதொரு கதை புத்த மதத்திற் சொல்லப்படுகின்றது.

"காமமே கன்றி நின்ற கழுதை கண் டருளி னலே
வாமனுர் சென்று கூடி வருந்தினு ரென்று வையத்
தீமஞ்சேர் மாலை போல இழித்திடப் பட்ட தன்றே
நாமவேல் தடக்கை வேந்தே நாமிது தெரியினென்னுள்" *

என இன்னோரன்னவை பொருந்தாமையைச் சீவகசிந்தாமணி ஆசிரியருங் காட்டினுர். (6)

ஒரு பொருளைத் தேடி அதற் குரையும் தேடி
உரைப்பதன்முன் உணர்விறக்கும்; உனக்கு நூல்என்!
மருவிவரும் சந்தான வழியில் என்னில்,
வாயுரைத்த தேயுரைத்து வழங்கு மாகும்;
பெருகுவது கெட்டென்னில், அதுபோ லாம்பின்;
பித்துரைத்த தறியாது பேதை சொல்லாம்;
தருவதுநூல் எப்பரிசு, முதல்நடுவோ டிறுதி
தான்விருத்த மின்றி? அது சாற்றி டாயே. 101.

* நாமகள் இலம்பகம் - 181

## இதன் தெளிபொருள்

முதலில் ஒரு பொருளை ஆராய்ந்து உணர்ந்து, பின் அதனை வெளிப்படுத்தற்குரிய சொற்களைக் கோவைப்படுத்திக்கொண்டு அவ்வாறே பின்பு நூலைச்செய்தல் வேண்டும். அவ்வாறாக 'இரண்டு கணத்திற்குமேல் மூன்றாவது கணத்தில் எதுவும் இருப்பதில்லை' எனக் கொண்டு, 'அறிவும் அத்தன்மையதே' என்று கூறும் உனது மதத்தில் நூல் உண்டாதல் எவ்வாறு?

'முன்னை அறிவு அழிந்தாலும் அதன் வாசனை, கத்தூரியின் வாசனை வேறு பொருளிலும் சென்று பற்றுதல்போலப் பின்னையறிவில் சென்று பற்றுதலால் பொருளுணர்ச்சி இடையறாது நிகழும்' என நீ கூறினால், கத்தூரியின் வாசனை மற்றொரு பொருளிற் பற்றினாலும் கத்தூரியின் வாசனையேயாய் இருக்கும் அன்றி வேறொரு வாசனையாக ஆகாததுபோல, முன்னையறிவின் வாசனை பின்னையறிவிற் பற்றினாலும், முன் அறிந்த பொருளின் உணர்வாயே நிற்குமன்றி மற்றொரு பொருளின் உணர்வாய் இருத்தல் இயலாது. ஆகவே அவ்வறிவைக் கொண்டு பல பொருளைக் கூறும் நூலை இயற்றுதல் எப்படி?

'முன்னையறிவின் வாசனையோடு, பின்னை அறிவின் பொருளுணர்ச்சியும் சேர்தலால், தொடர்ச்சியில், முன்னை அறிவை விடப் பின்னை அறிவு பெரிதாகும்' என்பது உனது விடையாகுமானால், பின்னையறிவும் முன்னதுபோலப் பின் சிறிதாய் நிற்கும் ஆதலால், எப்பொழுது அறிவு நிரம்பி, நூலைச் செய்வது? எப்பொழுதும் உன் மதத்திற்குக் குறை நூல் உண்டாகுமேயன்றி, நிறைநூல் உண்டாகாது. அத்தன்மையான குறை நூல்கள் பித்தர் சொற்களுக்கும், பேதையர் சொற்களுக்குமே நிகராகும்.

'நூல்' எனப்படுவது முதல் நடு இறுதி மாறுகோளின்றி அமைவதாகலின், 'அஃது உன் மதத்திற்கு எவ்வாற்றானும் உண்டாதல் இல்லை' என்பது உனது வாய்ச்சொல்லானே பெறப்படுகின்றது.

### விளக்கம்

'வாய், தான் முன்னுரைத்ததையே பின்னும் உரைத்து வழங்கும்' என்க. வழங்குமாகும் – வழங்கும் என்பதாய் முடியும். பின்னைய அறிவை, " பின் " என்றார். உம்மை விரித்தும், 'ஆம்' என்பது வருவித்தும், 'பித்து உரைத்ததும், பேதை சொல்லும் ஆம்' என முடிக்க.

முன்னைப் பல அறங்கள் பூரித்தெம் இறைவன்
முழுதுணர்ந்திங் கருளினால் உயிர்கள் முத்திஅடையப்
பின்னைப் பிடகநூல் உரைத்தான் என்று
பேசினாய்; இவன்முன்பு பேரறங்கள் புரிநூல்
சொன்னார் ஆர்? இவனைப்போல் முன்ஒருவன் என்னில்
அவனுக்குச் சொன்னார் ஆர் எனத் தொடர்ச்சியாகி
அன்னாய்பின் அனவத்தைபடும்; ஒருவன் இன்றும்;
ஆரோஉன் பாழிஇருப் பார்? இதனை அறையே. 102.

## இதன் தெளிபொருள்

நீ, எங்கள் இறைவன் முதலில் பல அறங்களையும் செய்து நிறை ஞானி (புத்தன்) ஆகிப் பின் எல்லாவற்றையும் உணர்ந்து உயிர்கள்மீது வைத்த கருணையால், அவைகள் முத்தியடைதற் பொருட்டுப் பிடகநூல் செய்தான்' என்று கூறினாய். இவன் அறத்தை உணர்ந்து செய்தற்கு யார் நூல்செய்து கொடுத்தார்?

'இவனைப்போன்ற நிறைஞானி ஒருவன் செய்து கொடுத்தான்' எனக் கூறினால், பின்னும், 'அவனுக்கு நூல்செய்து கொடுத்தவர் யார்' என்ற வினாவும், 'அவனைப்போன்ற ஒருவன்' என்ற விடையும் தொடர்ந்துகொண்டேபோக, 'வரம்பின்றியோடல்' என்னும் குற்றமாம், ஆகவே, உன் மதத்திற்கு நூல் செய்துகொடுத்த தலைவன் ஒருவனும் இல்லை என்பதே முடிவாகின்றது. அதனால், 'பாழி' என்றும், 'பள்ளி' என்றும் சொல்லப்படுகின்ற உங்கள் கோயிலில் உங்களால் வழிபடப்படுபவன் யாவன் என்னும் வினாவிற்கு உங்கள் மதத்தில் விடையில்லையாகின்றது.

## விளக்கம்

'அன்ன' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. ஆய்பு - ஆய்வு. அன்ன ஆய்பின் - அந்த ஆராய்ச்சியில். அநவத்தை - முடிவின்மை. படும் - உண்டாகும். (8)

(தொடரும்)

# திருவண்ணாமலைச் சிவாலயம்

திருமுறைக் கலைஞர்,

**வித்துவான். திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார்**

**தோற்றுவாய் :**

" அண்ணாமலை தொழுவார் வினை வழுவாவண்ணம் அறுமே"

" நினைத்துத் தொழுவார் பாவம் தீர்க்கும்
..................அண்ணாமலையாரே."

— தேவாரம் - ஞானசம்பந்தர்.

வேத சிவாகமங்கள் கூறும் சைவ சமய நெறிகளையும், பக்திப் பெருக்கான வழிபாட்டு முறைகளையும் வளர்க்கும் நம் புண்ணியப் பெருநாட்டில் இமயம் முதல் இலங்கை ஈறாக 1008 சிவன் உறையும் சிவத்தலங்கள் உள்ளன. இவற்றில் சமய குரவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் இம்மூவரும் வழிபட்டுத் தேவாரத் திருப்பதிகங்கள் பாடிய சிவத்தலங்கள் 274 ஆகும். இவற்றுள் நடுநாட்டுப் பிரிவில் 22 ஆவது சிவத்தலமாகத் திகழ்வது திருவண்ணாமலை என்னும் திவ்வியத்தலம் ஆகும்.

இது தொன்றுதொட்டு மிகப் பிரசித்திபெற்றது. சோணாசலம், சோணாத்திரி, சோணகிரி, அருணாசலம், அருணாத்திரி, அருணகிரி *, அண்ணாமலை என்ற பல பெயர்களைக்கொண்டது. ஞானரக்ரம், முத்திபுரி என்ற விசேடப் பெயர்களையும் பெற்றது. திருவண்ணாமலை திருவருணை எனவும் மருவி வழங்குவது. தேவாரம், திருவாசகம் பெற்ற பெருமையினை உடையது. அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்கள் பல பெற்றுத் திகழ்வது.

---

* சோணம், அருணம் - சிவப்பு; அக்கினி, அசலம், அத்திரி கிரி-மலை. சோண + அசலம் = சோணாசலம். சோண + அத்திரி = சோணாத்திரி. அருண + அசலம் = அருணாசலம். அருண + அத்திரி = அருணாத்திரி. இவை வடமொழிப் புணர்ச்சிகள். ஒரு யுகத்தில் இம்மலை அக்கினி மலையாக விளங்கியது.

இத்திருவண்ணாமலைத் திவ்வியத்தலம் பஞ்சபூதங்களுள் தேயு (அக்கினி) த்தலமாகவும், ஆருதாரத் தலங்களுள் மணிப்பூரகத்தலமாகவும், முத்திக்தலங்கள் நான்கினுள் நினைக்க முத்திதரும் தலமாகவும், மூர்த்தி தலம், தீர்த்தம் என்ற இம்மூன்றும் சிறப்பாக உடைய தலமாகவும், ஞானத்தபோதனரை 'வா' என்று அழைத்து அவர்களுக்கு அருள்புரியும் சிவலோகமாகவும் விளங்கி வருவது.

பிரம விஷ்ணுக்கள், இந்திராதி தேவர்கள், விஞ்சையர், கந்தருவர், நாகர், அருந்தவர், முனிவர்கள் முதலியோர் நெருங்கி வந்து இறைவணங்கிய அண்ணாமலையாரைத் தரிசித்துப் பணிய இடங்கிடைக்காது அர அர என்று எப்பொழுதும் கடலினும் மிக முழங்குவது அருணையம்பதியே ஆகும்

இரவிகள் சந்திரர் வயிரவர் விஞ்சையர்
இமையவர் எண்டிசையோர்
உரகர் அருந்தவர் முனிவர் பங்கயர்
உவண நெடுங்கொடியோர்
பரவி நெருங்கலின் உலகம் நிறைந்தவர்
பணியும் இடம் கிடையாது
அர அர என்பது கடலினும் முழங்கியது
அருணை வளம்பதியே.

—அருணாசல புராணம்

## திருவருணைத் திருக்கோயில் :

திருவண்ணாமலைத் திருத்தலத்துத் திருக்கோயில் (சிவாலயம்) மலையின் (அண்ணாமலையின்) கிழக்கு அடிவாரத்தைச் சற்று ஒட்டிச் சுமார் 24-ஏக்கர் நிலப்பரப்பில் சிறிது நீண்ட சதுரம் கொண்டு கிழக்கு நோக்கிய சந்நிதியாகத் திகழ்வது; அதனைச் சுற்றி நாற்புறமும் கருங்கற்களால் கட்டப்பெற்ற மிக உயர்ந்த - பெரிய - அழகிய ஒன்றையொன்று அடுத்த மூன்று திருச்சுற்று மதில்கள் உள்ளன. அவற்றில் கிழக்கு முதலாகிய நான்கு திசைகளிலும் முதல் திருச்சுற்று, இரண்டாவது திருச்சுற்றுமதில்களில் நந்நான்கு திருவாயில்களும் அவ்வாயில்களில் முதல் திருச்சுற்று மதில்களில் மிகவுயர்ந்த - பெரிய - நான்கு திருக்கோபுரங்களும் இரண்டாவது திருச்சுற்று மதில்களில் சிறிய நான்கு திருக்கோபுரங்களும், மூன்றுவது திருச்சுற்று மதில்களில் கிழக்குத் திருவாயிலில் ஒரு திருக்கோபுரமும் மேற்குத் திருவாயில் கோபுரம் இன்றி இருப்புக்காப்புக்கதவிட்டவாயிலும் ‡ உள்ளன.

---

‡ இவ்வாயில் பிற்காலத்தில் நகரத்தார் பெரிய திருப்பணி செய்யும்போது வண்டிகளில் பெருங்கற்கள், செங்கல்கள், பிற

இத்திருக்கோயில், ஒன்பது திருக்கோபுரங்களையும் ஐந்து திருச்சுற்றுகிய பிராகாரங்களையும் கொண்டு தெய்வப் பொலிவுடன் திகழ்வது; முதல் திருச்சுற்றுக் கிழக்குத்திருமதிலில் உள்ள இராசகோபுரம் (பிரபுடதேசமகாராசன் † திருக்கோபுரம்) மிகப்பெரியது. அது பதினொரு அடுக்கு நிலைகளைக் கொண்டு 219 அடி உயரத்தில் மிக அழகுடன் வானளாவி நிற்பது; ஸ்தூல லிங்கமாக வணங்கத்தக்க பெருமை கொண்டது.

முதல் திருச்சுற்றுத் திருமதில்களில் அமைந்த தெற்குத் திருக்கோபுரத்தின் திருவாயில் வழியாக, நாடோறும் சுவாமிக்குத் திருமஞ்சனம் (அபிடேக தீர்த்தம்) மேளவாத்தியச் சிறப்புடன் வருவதால் அது திருமஞ்சன கோபுரம் எனவும், மேற்குத் திருக்கோபுரம் காரைக்காலம்மையாராகிய பேய்க்கோபுரம் § எனவும், வடக்குத் திருக்கோபுரம் அம்மணி அம்மாள் கோபுரம் எனவும், இரண்டாவது திருச்சுற்றுத் திருமதில்களின்கண் அமைந்த கிழக்குத் திருக்கோபுரம் வல்லாள மகாராசன் கோபுரம் எனவும், மற்றைய தெற்கு, மேற்கு, வடக்குத் திசைகளில் அமைந்த சிறிய கோபுரங்கள் கட்ட கோபுரங்கள் எனவும், மூன்றும் திருச்சுற்று மதிலின் கிழக்குத் திருக்கோபுரம் முன்பு வச்சிராங்கதபாண்டியன் கோபுரம் எனவும், பின்பு கிள்ளி (- வளவன்) கோபுரம் எனவும், அதன் பின்பு கிளிகோபுரம் எனவும், பெயர்கள் வழங்கிவருகின்றன. கிளி கோபுரம் - இஃது அருணகிரிநாதர் கிளி வடிவுடன் வந்து அமர்ந்த கோபுரம் என்கின்றனர் ஒருசிலர். வேறுசிலர், கிள்ளி என்ற சொல்லில் இடைக்குறைந்து கிளி என ஆயிற்று என்பர்.

---

சாமான்கள் கொண்டுவருதற்கும் கொண்டுபோதற்கும் இடித்து அமைத்த இடைக்கால வாயில் என்பர்.

† பிரபுடதேசமகாராசன் - இவன் கி. பி. 15- ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் விஜயநகரத்து நாயக்கர் ஆட்சிக்கு உட்பட்ட அரசன் ஆவான்.

$ பேய்க்கோபுரம் - இதனை விஜயநகர நாயக்கர் ஆதரவில் இருந்த திருவருணை - சோமசமுத்திரக் கிராம வைணவ அந்தணர்கள் திருமலையினைச் சுதரிசனகிரி என்றும் மேலைக்கோபுரத்தைப் பேய்ஆழ்வார் கோபுரம் என்றும் வழங்கி வந்தனர். தற்போது காரைக்காலம்மையார் என்ற சொல்லும், ஆழ்வார் என்ற சொல்லும் போய், பேய்க்கோபுரம் என்றும் மேலவீதியைப் பேய்க்கோபுர வீதி என்றும் வழங்குகிறது.

இத்திருக்கோயிலில்-கருவறையில் எழுந்தருளியுள்ள மூர்த்தியாகிய சிவபெருமான் சோதித் தூண் வடிவும், சுயம்பு வடிவும் ஆகிய அருள்மிகு அருணாசலேசுவரர் அல்லது அண்ணாமலையார் ஆவார். இரண்டாம் பிராகாரத்தின் வடபகுதியில் தனியே எழுந்தருளியுள்ள அம்மையார் அருள்மிகு உண்ணாமுலை உமையாள் என்னும் அம்மையார் ஆவர்.

## அண்ணாமலையினது சிறப்பு :

திருவருணைச் சிவாலயத்தின்மேல்பால் மேலைமாடவீதியினை அடுத்தாற்போலத் திகழ்வது அண்ணாமலை என்ற திருமலையின் கிழக்கு மலை அடிவாரம். இம்மலையின் தோற்றம் தெய்வப் பொலிவுடன் விளங்குவது. இதன் உச்சி கடல்மட்டத்திற்குமேல் 2668 அடி உயரம் உடையது. இது சுமார் 4 கல் தொலைவு தெற்கு வடக்கில் அகன்று பரவி நீண்டு உயர்ந்து சரிவாக ஒருவாறு சக்கர வடிவுபோலக் காட்சி அளிப்பது.

இம்மலையினைச் சுற்றி நாற்புறமும் கப்பி இட்ட பெருவழியினை அமைத்துள்ளனர். அதன் சுற்றளவு சுமார் 8 கல் தொலைவு உள்ளது.

இத்திருமலையின் பின்பக்கம் (மேற்கில்) மலையினை அடுத்து 4 பர்லாங்கில் அணியணாமலை ( அடி அண்ணாமலை ) என்ற திருக்கோயில்-சிவாலயம் உள்ளது. இத்தலம் தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதி ஆகும்.

இத்திருமலையினை அருள்மிகு அருணாசலேசுவரர் திருவுருவாகவே மக்கள் கருதித் தாங்கள் எண்ணியவை எண்ணியவாறு கைகூடும் பொருட்டு நாடோறும் சிலர் வலம் வருவதும் விசேட புண்ணிய நாட்களில் ஏராளமான அன்பர்கள் வலம் வருவதும் பிரசித்தமாகும்.

( தொடரும் )

---

EXTRACT FROM THE VISITOR'S BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

Cleanliness is next to Godliness is the saying. In this temple both are seen in abundance. Anyone coming out after worship will definitly return clean in mind and thought. I am grateful for the kindness I received from one and all as if it were from the Divine God itself.

(Sd) K. PARASARAN.
Advocate General, Madras.

10—7—76

# திருமந்திரம்

## பத்தாந் திருமுறை - முதல் மூன்று தந்திரங்கள் மட்டும்

( தெளிவுரை - குறிப்புரையுடன் )

தெளிவுரை குறிப்புரை எழுதியவர்: தருமை ஆதீனப் புலவர் மகாவித்துவான். திரு. சி. அருணைவடிவேலு முதலியார். சைஸ்: டிம்மி 1 x 8. பக்கங்கள் 910. விலை: ரூ. 15—00. பதிவு அஞ்சற் செலவு ரூ. 3—10.

வடமொழியில் வேதம் பொது நூலாகவும் சிவாகமம் சிறப்பு நூலாகவும் விளங்குதல் போலத் தமிழில் திருக்குறள் பொது நூலாகவும் திருமந்திரம் சிறப்பு நூலாகவும் விளங்குகின்றன. இவ்விரு நூல்களும் தமிழ் மக்கள் உணர்ந்து போற்றற்குரியன வாகும். இவற்றுள் திருமந்திரம் பன்னிரு திருமுறை வரிசையில் பத்தாம் திருமுறையாக விளங்குவது. திருமூலர் உலகியலுக்குரிய அறங்கள் பலவற்றோடு வீட்டு நெறியை இந்நூலுள் விரிவாகக் கூறியுள்ளார். தமிழாகமமாகப் பாராட்டப்பெறும் இந்நூலில் சித்தர்கள் பலரும் சிறப்பாகப் பேணிப் போற்றிய சிவயோகக் கலை சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது.

'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரரால் திருத்தொண்டத் தொகையில் போற்றப்பெறும் திருமூலதேவர் இந்நிலவுலகில் மூவாயிரம் ஆண்டுகள் தவம் செய்து ஆண்டுக்கொரு பாடலாக இந்நூலை அருளிச் செய்தார் என்று கூறுவர். திருமூலரின் விழுமிய அனுபவ நூலாக வெளி வந்த இந்நூல் சமய உலகிலும் தமிழுலகிலும் சிறந்த நூலாகப் போற்றப் பெறுவது.

ஒன்பது தந்திரங்களை உடைய இந்நூலின் முதல் மூன்று தந்திரங்கள் (866 பாடல்கள்) தெளிவுரை குறிப்புரையோடு இப்போது வெளிவந்துள்ளன.

முதல் தந்திரம் கொல்லாமை, புலால் உண்ணாமை முதலிய உலகியல் அறங்களைக்கூறுவது. இரண்டாம்தந்திரத்தில் புராண வரலாற்றுத் தத்துவங்கள், இறைவனது ஐந்தொழில், கருப்பக் கிரியை, மூவகைச் சீவவருக்கம் முதலியன கூறப்பட்டுள்ளன. மூன்றும் தந்திரத்தில் - அட்டாங்கயோகம் பிராசாதயோகம் அட்டமாசித்தி முதலிய யோகக்கூறுகள் சொல்லப்பெற்றுள்ளன.

திருமந்திர நூற்பொருளைத் தெளிவாக அறிதற்கு இந்நூல் பெரிதும் துணைபுரியும். தமிழுலகமும் சமய உலகமும் ஆவலோடு எதிர்பார்த்திருந்த இந்நூல் தருமையாதீனம் 25 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் தொடங்கப்பெற்று, அவர்களது வழித்தோன்றலாய் இன்று ஞானபீடத்தில் எழுந்தருளியிருந்து அருள் வழங்கும் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் வெளியிடப்பெற்றது. தமிழுலகமும் சமய உலகமும் இந்நூலை நன்றியறிதலோடு பெற்றுப் போற்றிப் பயனெய்துவதாக.

கிடைக்குமிடங்கள் :—

1. செயலாளர், ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமையாதீனம், மாயூரம் 609001. தஞ்சாவூர் மாவட்டம்.

2. டிரஷுரர், ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், வைத்தீசுவரன்கோயில், தஞ்சாவூர் ஜில்லா.

3. காஷியர், ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானம், சீகாழி, தஞ்சாவூர் ஜில்லா.

---

## சென்னை தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில்
## நாயன்மார்கள் குருபூஜை விழா

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் மாணிக்கவாசகர், அமர்நீதி நாயனர், மூர்த்திநாயனர், புகழ்ச்சோழர், கூற்றுவநாயனர் குருபூஜை ஜூலை மாதம் 1, 2, 21, 25 தேதிகளில் நடைபெற்றது. அவ்வமயம் புலவர் திரு. N. இராசு அவர்களும் திரு. அம்மையப்பன் அவர்களும் பெரியபுராண விரிவுரை செய்தார்கள். திருமுறை பயிலும் மாணவ, மாணவிகளும் அன்பர்களும் கேட்டுப் பயனடைந்தனர்.

## பெரியபுராண விரிவுரை

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் ஜூலை மாதம் 3, 8, 19, 24 தேதிகளில் மாலையில் நிலைய மன்றத்தில் திரு. S. சிவகுமார் அவர்களால் பெரியபுராண விரிவுரை நிகழ்த்தப் பெற்றது. திருஞானசம்பந்தர் புராணம் தொடர்ந்து நடந்து வருகிறது. விரிவுரையை அன்பர்கள் பலர் கேட்டுப் பயன் பெற்றனர்.

# செய்திகள்

## தருமையாதீனத்தில் கயிலைக் காட்சி விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமை யாதீனம் 25 வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தரிசித்து மகிழ்ந்த மகாகயிலாயக் காட்சி பதினேழாவது ஆண்டுவிழா, தருமையாதீனம் 26 வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், திருவுளம் பாலித்தருளிய வண்ணம் நள ஆண்டு ஆடித்திங்கள் 11-ஆம் நாள் (26—7—76) திங்கட்கிழமை யன்று ஆதீன மடாலயத்தில் நடைபெற்றது. காலை, மாலை இருவேளைகளிலும் சொக்கநாதப் பெருமான் பூஜை மடத்தில் திருக்கயிலாயத் திருவுருவப்படத்திற்கு சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் பூஜைமடத்தில் பண்ணிசை வாணர்களால் திருமுறைப் பாராயணம் அகண்ட பாராயணமாக நிகழ்த்தப்பெற்றது. நண்பகல் மாகேஸ்வரபூஜை நடைபெற்றது. இரவு வெள்ளி யிரதத்தில் திருக்கயிலாயத் திருவுருவப்படத் திருவீதியுலா, பண்ணிசை வாணர்களின் திருமுறைப் பாராயணத்துடன் நடைபெற்றது. திருவீதியுலாவின்போது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் உடன் எழுந்தருளி அருட்காட்சி வழங்கினர்கள். உள்ளூர், வெளியூர் அன்பர்கள் பலர்வந்து வழிபாட்டில்கலந்துகொண்டு அருளாசி பெற்று மகிழ்ந்தார்கள். அன்று மாலை 6-மணி அளவில் தருமையாதீனத் தமிழ்ப்புலவர் திருநெறிச் செம்மல், வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் M. A தருமை யாதீனத் தமிழ்ப் புலவர், செஞ்சொற்கொண்டல், டாக்டர் திரு. சொ சிங்காரவேலன் M A. Phd. தருமை யாதீனத் தமிழ்ப் புலவர் வித்துவான். சிரோமணி, திரு. வி. சுரேசன், வித்துவான். திருமதி ப. நீலா M A. வித்துவான். திரு. இரா செல்வக்கணபதி M A. ஆகியோர் முறையே நக்கீரர் கண்ட கயிலை, அப்பர்கண்டகயிலை, சுந்தரர்கண்டகயிலை, சேரமான் கண்ட கயிலை, சேக்கிழார்கண்ட கயிலை என்ற தலைப்புக்களில் விரிவுரையாற்றினர்.

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூஜை விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமை யாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள்

குருபூஜை விழா ஆடியீ 18உ (2—8—76) திங்கட்கிழமை நடைபெற்றது. அன்று ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகட்கும், ஏனைய சமயாசாரியர்கட்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூஜைமடத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் புராணம் படிக்கப்பெற்றது. இரவு வெள்ளி ரதத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஸ்ரீ சேரமான் பெருமாள் நாயனூர் திருவீதியுலா நிகழ்ந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கியருளினர்கள் தருமையாதீனத் தமிழ்ப் புலவர் திருநெறிச்செம்மல், வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர் M. A., தருமையாதீனப் புலவர் செஞ்சொற்கொண்டல், டாக்டர் திரு சொ. சிங்காரவேலன் M. A., Phd தருமையாதீனத் தமிழ்ப்புலவர், வித்துவான், சிரோமணி, திரு. வி. சபேசன், வித்துவான் திரு. இரா. செல்வக்கணபதி M. A. வித்துவான். திரு. கா. ம. கண்ணப்பன் ஆகியோர் அற்புத விளக்க விரிவுரை நிகழ்த்தினர். அன்பர்கள் பலர் வழிபட்டும் விரிவுரைகளைக் கேட்டும் பயன்பெற்றனர்.

## தருமையாதீனத் திருக்கோயில்களில் :

## ஆடிப்பூரத் திருவிழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான, வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில், ஸ்ரீ வாலாம்பிகையம்மைக்கும், சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ திருநிலைநாயகி அம்மைக்கும் திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ அபிராமி அம்மைக்கும் ஆடிப்பூரத் திருவிழா 21—7—76 புதன்கிழமை முதல் தொடங்கி 30—7—76 வெள்ளிக்கிழமை முடிய உள்ள பத்து நாட்களிலும் சிறப்பாக நடைபெற்றது 29—7—76 அன்று திருத்தேர்த் திருவிழாவும்30—7—76 அன்று தீர்த்தத்திருவிழாவும் நடைபெற்றன. பக்தர்கள் பலர் வழிபட்டுப் பயன்பெற்றனர்

## ஆடி வெள்ளிக்கிழமைகளில்

## நவசக்தி அருச்சனை

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கோயில்களில் ஆடி மாதத்தில் வரும் ஒவ்வொரு வெள்ளிக்கிழமைகள்தோறும் அம்பாளுக்கு நவசக்தி அருச்சனைகள் உலக நலங்கருதி நடைபெற்றன. சீகாழியில் ஸ்ரீ பிரமபுரீசுவரர், வேளூரில் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி, திருக்கடவூரில்

ஸ்ரீ அமிர்தகடேசுவரர் ஆகிய மூர்த்திகட்குப் பஞ்சமுகார்ச்சனை களும் சீகாழியில் ஸ்ரீ திருநிலைநாயகியம்மை, வேளூரில் ஸ்ரீ தையல் நாயகி அம்மை, திருக்கடவூரில் ஸ்ரீ அபிராமி அம்மை ஆகிய மூர்த்திகட்கு நவசக்தி அருச்சனைகளும் சிறப்பாக நடைபெற்றன. இவ்வர்ச்சனை வழிபாட்டிற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள் பக்தர்கள் பலர் வழிபட்டுப் பிரசாதம் பெற்றுப் பயன்பெற்றனர்

இந்நாட்களில் ஆதீன தேவஸ்தானத் தேவாரவகுப்பு மாணவர்களால் அபிராமி அந்தாதி பாராயணம் செய்யப் பெற்றது.

## திருக்கடவூரில் புஷ்பாஞ்சலி

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்த மான திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத் தில் ஸ்ரீ அபிராமி அம்மைக்கு 30—7—76 வெள்ளிக்கிழமையன்று ஆடிப்பூர நன்னாளில் புஷ்பாஞ்சலி நடைபெற்றது. அம்மையின் சந்நிதி புஷ்பங்களால் அழகுறுத்தப்பெற்றிருந்தது அபிஷேக ஆராதனைகளும், அர்ச்சனையும் சிறப்புற நிகழ்ந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். பக்தர்கள் பலர் வந்து வழிபட்டுத் திருவருட் பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர். திரு. R. சந்திரன், திரு V. S. இராமகிருஷ்ணன், திரு. தியாகராஜ செட்டியார், திரு. V. பரசுராம செட்டியார், திரு. E. சம்பந்தம் & கோகிலா, திரு. கஜேந்திரன் ஆகியோர் உபயமாகப் புஷ்பாஞ்சலி வழிபாடு நிகழ்த்தப்பெற்றது

வேளூரில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்த மான வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் சென்ற சௌம்ய ஆண்டு ஆனித்திங்கள் 18 ஆம் நாள் (2—7—69) புதன்கிழமை திருவோண நக்ஷத்திரத்தில் அஷ்ட பந்தன மகாகும்பாபிஷேகம் நடந்ததையொட்டி இவ் ஆண்டு ஆனித்திங்கள் 30 ஆம் நாள் (13—7—76) செவ்வாய்க்கிழமை திருவோண நக்ஷத்திரம் கூடிய நன்னாளில் சம்வத்ஸராபிஷேகம் நடைபெற்றது. வேதபாராயணம் திருமுறைப்பாராயணம் முதலியவைகள் நடைபெற்றன. அன்று காலையில் சுவாமி, அம்பாள், ஆறுமுகசுவாமி அங்காரகன், சண்டிகேஸ்வரர் ஆகிய மூர்த்திகளுக்கு அபிஷேகம், ஏகாதசருத்ரஜபம் முதலியன வும், ஆஸ்தானமண்டபத்தில் பஞ்சமூர்த்திகளுக்கும் அங்காரகன் ஜடாயு ஆகிய உற்சவ மூர்த்திகளுக்கும் அபிஷேகமும் நடைபெற் றன. மாலையில் சுவாமிக்குப் பஞ்சமுக அர்ச்சனையும், அம்பாளுக்கு

நவசக்தி அர்ச்சனையும் ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கும் ஸ்ரீ ஆறுமுககுமாரருக்கும் சண்முக அர்ச்சனையும், விநாயகருக் அங்காரகனுக்கும் சகஸ்ரநாம அர்ச்சனையும் நடைபெற்றன. பக்தர்கள் வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## பூம்புகாரில் - தலவழிபாடு - பட்டமளிப்புவிழா

பூம்புகார் (மேலையூர்) தாசில்பண்ணையில் பத்தினிக்கோட்டம் அமைத்து, கண்ணகியின் திருவுருவத்தை எழுந்தருளச் செய்து நாள் வழிபாடு நிகழ்த்தி வருவது அனைவரும் அறிந்ததே. இப் பத்தினிக் கோட்டத்தில் கண்ணகிக்கு ஆடி அனுட நாளில் 5—8—76 அன்று சிறப்பு வழிபாடு நடைபெற்றது. அதன் தொடர் பாக 30—7—76 முதல் சிலப்பதிகாரத் தொடர் விரிவுரை, சிலப்பதிகார ஆய்வரங்கம், கருத்தரங்கம் முதலியன அறிஞர் பெருமக்களால் நிகழ்த்தப்பெற்றன. இப் பத்தினிக் கோட்ட அறநிலையக் காப்பாளர் திரு இரா. இராஜசேகரன் B Sc B.L. அவர்கள் நிகழ்த்தும் இத்தகு அருஞ்செயலைப் பாராட்டி ஊக்குவிக்கும் முறையில் ஊர்ப்பொதுமக்கள் அவருக்குப் பட்ட மளித்துச் சிறப்புச்செய்ய வேண்டும் எனத் தருமை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் வேண்டினர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவுளம் இசைந்து 7—8—76 அன்று மாலை பூம்புகாருக்கு எழுந்தருளினர்கள்.

கல்லூரித் தாளாளர் திருக்கடவூர் பிச்சக்கட்டளை எஸ்டேட் திரு. கே. கனகசபைப் பிள்ளை அவர்களும் திருவெண்காடு திரு. T. M சீனிவாசம் பிள்ளை அவர்களும் கல்லூரி முதல்வர் பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள் முதலியோரும் பூம்புகார்க் கலைக் கல்லூரிவாயிலில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களைப் பூர்ண கும்பமரியாதைகளுடன் வணங்கி வரவேற்றனர்கள். பின்னர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் காவிரி சங்கம மாகும் இடத்திற்கு எழுந்தருளி தீர்த்தப் புரோக்ஷணம் செய்து கொண்டு நெடுங்கல் மன்றம், இலஞ்சி மன்றம் கலைக்கூடம் இவற்றைப் பார்வையிட்டார்கள். கலைக்கூடத்தில் கலைக்கூட மேற்பார்வையாளர் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கட்கு மாலை அணிவித்து வரவேற்றார்கள். பின்னர் பல்லவனீச்சரம், திருச்சாய்க்காட்டுத் திருக்கோயில்களுக்கு எழுந் தருளி தலப்பதிகங்களை ஓதச்செய்து வழிபாடு நிகழ்த்தினர்கள். பல்லவனீச்சரம், திருச்சாய்க்காட்டுத் திருக்கோயில்களிலும் திருக் கோயில் அறங்காவலர்களும் நிர்வாகி அவர்களும் பூர்ண கும்பம் முதலிய கோயில் மரியாதைகளுடன் வரவேற்று உடனிருந்து வழிபாடு நிகழ்த்துவித்தார்கள். பாராட்டு விழாவிற்கு எழுந்

தருளிய ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை மேலையூர் தாசில்பண்ணை சீனிவாச உயர்நிலைப்பள்ளியின் வாயிலில் மாணவ மாணவிகள் வரிசையாக நின்று மலர் தூவியும், மெழுகுவர்த்தி ஏற்றி நின்றும் வரவேற்றனர். திரு. இரா. இராசசேகரன் திரு. கே. கனகசபைப்பிள்ளை, திரு. T. M. சீனிவாசம் பிள்ளை முதலியவர்களும் உயர்பள்ளித் தலைமையாசிரியர் திரு. சாமிநாத பிள்ளையும், உயர்பள்ளித் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களும் ஊர்ப் பொதுமக்களும், பெரியோர்களும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை நாதசுர இன்னிசை முழங்க வரவேற்று கொலுவில் எழுந்தருளச் செய்து வழிபாடு நிகழ்த்தி அருளாசி பெற்றனர். கொலுமேடை வண்ண மலர்களாலும் பிற இடங்கள் தோரணங்களாலும், வண்ணக் காகிதங்களாலும் ஒப்பனை செய்யப்பெற்றிருந்தன. கொலு வழிபாட்டிற்குப் பின்னர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கண்ணகிக் கோட்டத்திற்கு எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். அங்குப் பூர்ணகும்ப மரியாதைகளுடன் வரவேற்பு அளிக்கப்பெற்றது. பின்னர் இறை வணக்கத்துடன் பட்டமளிப்பு விழா தொடங்கிற்று. விழாக் குழுவினர்சார்பிலும், கார்கார்த்தார் சங்கச் சார்பிலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கு வரவேற்புப்போற்றி இதழ்கள் வாசித்தளிக்கப் பெற்றன. திரு. கே. கனகசபைப் பிள்ளை அவர்கள் விழாக் குழுவினர் சார்பில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்குப் பொன்னுடை அணிவித்து வணங்கினர்கள். பின்னர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திரு. இரா இராசசேகரன் அவர்களது செந்தமிழ்ப் பணியைப் பாராட்டி "செந்தமிழ்ப் புரவலர்" என்னும் பட்டம் வழங்கி, பொன்னுடை போர்த்தி அருளாசி வழங்கினர்கள்.

பட்டம்பெற்ற திரு. இரா. இராசசேகரன் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்குத் தமது போற்றியுரையைத் தெரிவித்துக்கொண்டார்கள் பட்டம்பெற்ற திரு. இராசசேகரன் அவர்களை, திரு. கே. கனகசபைப்பிள்ளை அவர்கள் பாராட்டிப் பேசினர்கள். திரு. T M. சீனிவாசம் பிள்ளை அவர்கள் நன்றியுரைக்குப் பின்னர் இறைவாழ்த்தோடு விழா இனிது நிறைவுற்றது.

## சென்னை தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்தில்

## கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா 23—7—1976 வெள்ளிக்கிழமை

மாலை 7-00 மணி அளவில் நடைபெற்றது. திரு. R. சிவஞானம் செட்டியார் அவர்கள் எல்லோரையும் வரவேற்றார்கள். விழாவிற்கு, சென்னை தலைமைச் செயலகம் வணிக வரி மற்றும் அறநிலையத்துறை ஆபிஸர் திரு. E. தேவராஜன் அவர்கள் தலைமை வகித்தார்கள். ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமி திருவுருவப் படத்திற்கு வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. நிலைய ஓதுவார் திரு S. ஞானப்பிரகாசம் வேளூர்த் திருப்பதிகங்களைப் பாராயணம் செய்தார். விழாத்தலைவர் தமது தலைமையுரையில், மனித வாழ்க்கையில் மன அமைதி மிகவும் முக்கியம் அசைப்பெற எப்பொழுதும் சிவநாமத்தையும் முருக நாமத்தையும் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். ஸ்ரீ முருகன் பகைவனுக்கும் பரிவு காட்டியதுபோல் நாமும் நமக்கு விரோதியாக இருப்பவரிடமும் நண்பு பாராட்டி வந்தால் மன அமைதி மேலும் வளரும். முருகனுடைய லீலைகளையும் பெருமைகளையும் மனதில் சிந்தித்துக் கொண்டு அவனைத் தினமும்வணங்கி வந்தால் நம்முடைய அகங்காரம் அழிந்துபோகும் என்று குறிப்பிட்டார்கள். புலவர் திரு. K. ஆறுமுகம் அவர்கள் எல்லோருக்கும் நன்றி நவின்ற பின்னர் பிரசாதம் வழங்கப்பெற்றது.

## மாதாந்தர சமயப்பிரசார வழிபாடு

சென்னை, தருமையாதீன சமயப்பிரசார நிலையத்தின் மாதாந்திர சமயப்பிரசார வழிபாடு 25—7—76 ஞாயிற்றுக் கிழமை மாலை சென்னை தேவராஜமுதலித் தெருவிலிருக்கும் ஸ்ரீ சென்னமல்லீஸ்வரர் ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. சுவாமிக்கும் அம்பாளுக்கும் முறைப்படி அபிஷேகம் செய்யப் பெற்றது. பின்னர் ஸ்ரீ விநாயகர், சுவாமி அம்பாள் ஸ்ரீ சுப்பிரமணியர், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி, ஸ்ரீ துர்க்கை ஸ்ரீ நடராஜர் முதலிய மூர்த்தங்களுக்கு அர்ச்சனை செய்யப்பெற்றன. வழிபாட்டின் போது எல்லா சந்நிதிகளிலும் நிலைய ஓதுவார் திரு. S ஞானப்பிரகாசமும் திரு. N. இராமமூர்த்தி அய்யரும் திருமுறைப் பாராயணம் செய்தனர்.

வழிபாட்டிற்குப்பின் சமயப்பிரசாரக் கூட்டம் நடைபெற்றது. திருமலைவையாவூர் சிம்மக்குரல்சீதாபதி, திரு. மு. கு. புண்ணியகோடி, திரு V N ஆறுமுகம், குமாரி, R. கௌரி ஆகியோர் “நால்வர்கண்ட நெறி” என்ற தலைப்பில் தேவாரத் திருமுறைகளின் பெருமையை எடுத்துக்கூறி அவைகளை ஓதுவதினால் ஏற்படும் பலன்களையும் விளக்கிக் கூறினார்கள். பின்னர் பிரசார நிலையம் வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் வழிபாட்டின் தத்துவத்தைப் பற்றிப் பேசியபின் கூட்டம் நிறைவுற்றது.

# எதிர்காலம்


ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.


## ( நளஹு ஆவணிமீ 1உ முதல் 31உ முடிய )

## (17—8—1976 முதல் 16—9—1976 முடிய)

ஸ்ரீ நளஹு ஆடிமீ 32உ சோமவாரம் பரணி நக்ஷத்திரத்தில் பத்திரை கரணம்கூடிய காலத்தில் சூரியஉதயாதி 34 நாழிகை 59 விநாடிக்கு, முன் இரவில் கும்ப லக்னத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் கடகராசியிலிருந்து சிம்மராசியில் சங்கிரமணமாக ஆவணி மாதப் பிரவேசம் செய்கிறார். அன்று விஷ்ணுபதி புண்ணிய காலமாகும். சங்கிரமண வாராதிபதி ஸ்ரீ சந்திரபகவான் சேனாதிபதியாகவும் பசு நாயகராகவும் திகழ்கிறார்.

சங்கிரமணகால கிரகஸ்திதியின் பலனாவது லோக க்ஷேமார்த்தமாக அகிலமெங்கும் நல்ல மழை பெய்யும். 2, 3 தேதிகளிலும் 11, 12 தேதிகளிலும் 14, 15 தேதிகளிலும், 24, 25, 29, 30 தேதிகளிலும் பாரத பூமியில் எங்கும் பரவலாக மழை ஏற்பட்டு ஸஸ்ய தானிய பயிர்கள் விருத்தியாகும். பசுக்கள் அதிகமாகப்பாலைத்தரும். பால்பண்டங்கள் மிகுதியாகத் தயாராகி வரும். தேச மெங்கும் புதிய தொழில் நிறுவனங்கள் ஏற்பட்டு உபயோகப்பொருள்களின் உற்பத்தி அதிகரிக்கும். உலகெங்கும் ஏற்பட்டுள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் திகழ்கின்ற குரு மகான்கள் உத்தமகுண நல்லோர்களின் மகோன்னத தெய்வீகத்தில் தெய்வத் திருவருள் பாக்கியத்தினால் தேவாலயங்களில் சிறப்பு பூசைகள் நடைபெற்று வருவதின்றும் வேத பாராயணங்கள் வருண ஜபங்களின் சக்தியினின்றும் மேலே குறிப்பிட்ட குருச்சந்திர சம்யோகம் சந்திர மங்கள சம்யோகமாகிய தேதிகளிலும் அந்த தினங்களின் நாடியாக வருகிற தேதிகளிலும் வேண்டிய மழைவரும். தேசங்களில் வளம் மிகுந்து பிரஜைகள் க்ஷேமத்துடன் வாழ்வார்கள்.

## 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை $\frac{1}{4}$

( சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் இம்மாதம் மிச்சிர பலனை நடக்கும். தனாதி சௌகரியங்களில் குறைவின்றி கௌரவத்தையும் குடும்ப நலன்களையும் அளித்து வரும் சகோதரர்கள் கல்வி, கலை, தொழில் துறைகளில் சிறப்புறுவார்கள். புத்திரர் புத்திரிகள் சௌக்கியத்துடனும் மேன்மைஸ்திதியுடனும் இருந்து வருவார்கள். சத்துரு பங்கம் ஏற்பட்டு வழக்கு விவகாரங்களில் ஜெயம் தரும். இம்மாதம் பிற்பகுதியில் மனைவிக்கு மூர்ச்சை போன்ற நலிவு ஏற்பட்டு குணமாகும். செய்தொழில் அல்லது உத்தியோகம் திறமையாக நடந்துவரும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

## 2. ரிஷபம் – கார்த்திகை$\frac{3}{4}$ – உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$

( இ. உ. ஏ. – ஓ. வ. வி. வு. – வே. வோ. )

ரிஷப ராசி 9 பாதங்களும் இம்மாதம் மிச்சிர பலனை நடக்கும். குடும்பத்தில் தனாதி சௌகரியங்கள் திருப்திகரமாக இருந்து வரும். சகோதரர்களுக்குத் தொழில் துறையில் சிரமம் தோற்றினும் மேலோர் பெரியோர்களின் அனுசரணைபலம் இருந்து வரும். பந்துமித்திரர்கள் வந்து கூடுவார்கள். இல்லத்தில் சுப விசேஷங்கள் நடக்கும். புத்திரர் புத்திரிகளுக்கு கல்வி கலைகளிலும் தொழில்களிலும் புகழும் அரசாங்கமூலம் நன்மையும் ஏற்படும். தாம்பத்திய வாழ்வு சுமுகமாக இருப்பினும் சிலசமயங்களில் மன சலிப்புஏற்படும். வயிற்றில் வலி அல்லது ஈரல் நோய் வந்து உடன் குணமாகும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம் தரும். செய் தொழில் அல்லது உத்தியோகத்தில் நற்பலன் ஏற்படும். புதன் வியாழன் சுபமாகும்

## 3. மிதுனம்–மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ – திருவாதிரை–புனர்பூசம் $\frac{3}{4}$

( கா. கி. – கு. க. ங. ச்சா. – கே. கோ. ஹ )

மிதுன ராசி 9 பாதங்களும் இம்மாதம் சுப பலனை நடக்கும். பொன் தனம் மேன்மேலும் பெருகும். சிவப்பு, பச்சை, வெள்ளை, கற்கள் பதித்த ஆபரண பிராப்தி உண்டாகும். பெற்றோர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். தார புத்திரர்களினால் மகிழ்ச்சி ஏற்படும். இல்லத்தில் சாஸ்திரோக்த தர்மங்கள் நடந்துகொண்டிருக்கும். சத்துருக்கள் மித்திரமாக வருவார்கள். ரோகம்குணமாகும். தொழில்துறை ஓங்கும். உத்தியோகமாகில் மேலிடங்களின் சகாய பலம் இருந்துகொண்டிருக்கும். மூதன்மையை அளிக்கும். வெள்ளி சனி சுபமாகும்.

## 4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. – டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் இம்மாதம் சுப பலனாக நடக்கும். தன சௌகரியம் மேலாக இருந்துவரும். வரவேண்டிய பாக்கிகள் வரவாகிக்கொண்டிருக்கும். வித்துவத்துவம் கல்வி கலை இவற்றினால் பிரசித்தப் ஏற்படும். சபாமன்றங்களில் தலைமை தாங்குதல், சமூகத்தினர் போற்றுதல், புகழ்மாலை பணியப் பெறுதல் ஆகிய கௌரவங்களை பளித்துவரும். சகோதரர்களுக்கு மேன்மை ஸ்திதி ஏற்படும். சுகமும் புத்திரர்களுக்கு சௌக்கிய பலனும் தரும். கணவன் மனைவியின் வாழ்வில் சுமுகம் நிலவும். தெய்வ பக்தியுடன் கூடிய தான தர்மங்கள் நடந்து வரும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் பேரந்தஸ்தும் புகழும் உண்டாகும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

## 5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼

(ம. மி. மு. மெ. – மோ. ட. டி. டு. – டே. )

சிம்மராசி 9 பாதங்களும் இம்மாதம் சுமார் பலனாக நடந்து வரும். தனச்செலாவணி சீராகவும் அவசிய செலவுகள் மிகுதியாகவும் இருக்கும். படபடப்பான வாக்கு பிரயோகத்தினால் சில சமயங்களில் மனம் சங்கடமாக இருக்கும். பூகிரகஸ்தி சொத்துக்களில் சர்ச்சையும் எதிர்பாராத சிரமங்களும் ஏற்படினும் முடிவில் அனுகூலத்தையே தரும். பெற்றோர்கள் மனோவேகத்துக்கிடையே ஸ்வற்ப உதவிகள் செய்துவருவர். புத்திரர் புத்திரிகளின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். தாம்பத்திய வாழ்வில் சுகமும் மகிழ்ச்சியும் நிலவும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் கௌரவத்தைக் கொடுக்கும். செவ்வாய் புதன் சுபமாகும்.

## 6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

( டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. – பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் இம்மாதம் சுப பலனாக நடந்து வரும். தனம் பாக்கியம் பெருகும். சகோதரர்களுக்கு சௌக்கியம் தரும். சுகமும் கிரக வாகனங்களில் சௌகரியமும் மேலாக இருந்து வரும். புத்திரர்களின் கல்வி தொழில் துறைகள் மேன்மை ஸ்திதியில் இருந்துவரும். கல்யாணாதி சுப விசேஷங்களை நடத்தி வைக்கும். மேலோர் பெரியோர்களின் அனுசரணை பலம் இருந்துவரும். வியாஜ்ஜிய வழக்குகளில் ஜெயம் தரும்.

தாம்பத்தியவாழ்வில் மகிழ்ச்சி நிலவும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் மேலிட அனுகூலங்கள் ஏற்படுத்தும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

## 7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

( ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. தூ. தே. )

துலாராசி 9 பாதங்களும் இம்மாதம் சுமார் பலனை நடக்கும். தனவசதி தாராளமாக இருந்துகொண்டிருக்கும். மூன்று விதமான ஆதாய பிராப்தியை உண்டுபண்ணும். கல்வி, கலை, தொழில் நுட்பத்தில் பிரசித்தம் தரும். அரசாங்க மூலம் நன்மைகள் ஏற்படும். சகோதரர் முன்னேற்றம் கருதியும் மனைவியின் நலன் கருதியும் செலவு ஒருபுறம் இருந்துவரும். பூமி, வீடு விற்பனையும் பூர்வ ஸ்திதியில் மாற்றமும் ஏற்படும். செய்தொழில் அல்லது உத்தியோகம் மாறும். சனி ஞாயிறு சுபமாகும்.

## 8. விருச்சிகம் - விசாகம் ¼ - அனுஷம் – கேட்டை.

( தோ. – ந. நி. நு. நெ. - நோ. ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் இம்மாதம் சுபபலனை நடக்கும். எதிர் பாராத வகையில் பணவரவு கனிசமாக வரும். சகோதரர் பெற்றோர்களின் நலன் நன்முக இருந்துவரும். அவர்களின் தொழில்துறை முன்னேற்றம் திருப்தியாக இருந்துவரும். புத்திரர்களுக்கு மேன்மை ஸ்திதியை யளிக்கும். தாம்பத்திய வாழ்வில் சுகம் தரும். தெய்வ பக்தி மிகும். இல்லத்தில் மங்கள காரியங்கள் நடக்கும் வழக்கு விவகாரங்கள் ஜெயிக்கும். செய் தொழில் அல்லது உத்தியோகம் கௌரவத்துடன் நடந்து வரும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

## 9. தனுசு - மூலம் – பூராடம் – உத்திராடம் ¼

( யே. யோ. பா. பி. – பு. த. ப. ட. – பே. )

தனுர் ராசி 9 பாதங்களும் இம்மாதம் மிச்சிரபலனை நடக்கும். தன வரவு சிராகவும் தக்க விஷயத்துக்கு உரிய காலத்தில் பொருள் கை கூடுவதாகவும் இருக்கும். முதல் வாரத்தில் எல்லா விஷயங்களிலும் துரிதமேற்படும். காரியானுகூலங்களைத் தரும். 2 வது வாரமுதல் மத்திம பலனை இருந்து வரும். சகோதரர் நலம் சாதாரணமாக இருக்கும். மேலோர் பெரியோர் களின் ஆதரவு பலம் இருந்துவரும். பெற்றோர்களுக்கு மனக் குறை ஏற்படுவதும் சரி செய்யும் நிலைமையுமாக இருக்கும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்முக இருந்து வரும். வழக்கு விவகாரங்களில் சாதக பாதகங்கள் கலந்து காணும்.

செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் அலைச்சலாக இருந்து வரும். புதன் வியாழன் சுபமாகும்.

### 10. மகரம் – உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½
(போ. ஜ. ஜி. – கி. கு. கே. கோ. – கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் இம்மாதம் சுப பலனாக நடக்கும். பணம் பெருமதிப்புடன் வரவாகிக்கொண்டிருக்கும். ஆடையாபரணங்களின் பிராப்தி உண்டாகும். பந்து மித்திரர்கள் வருகையும் உபசரணையும் நடக்கும். சமூகத்தில் புகழும் விசேஷ தன லாபங்களும் ஏற்படும். எல்லா விஷயங்களிலும் இஷ்ட சித்தியை யளிக்கும். புத்திரர் புத்திரிகளுக்கு சௌக்கியம் தரும். விவாகாதி சுப விசேஷங்களை ஏற்படுத்தும். தாம்பத்திய வாழ்வில் அன்யோன்யம் நிலவும். இல்லத்தில் சாஸ்திரோக்த தர்மங்களைச் செய்விக்கும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் புகழ் உண்டாகும். வெள்ளி சனி சுபமாகும்.

### 11. கும்பம் – அவிட்டம் ½ – சதயம் – பூரட்டாதி ¾
(கு. கே. – கோ. ஸ. ஸி. ஸு, – ஸே. ஸோ. த.)

கும்பராசி 9 பாதங்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். தன சௌகரியம் குறைவின்றி இருந்துவரும். சகோதர சகோதரிகளுக்கு சிரமத்தின் மேல் நன்மைகளை ஏற்படுத்தும். பூமி இயந்திர சாதனங்களில் அபிவிருத்தி பலன் ஏற்படும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். முயற்சித்த எல்லா விஷயங்களிலும் ஜெயானுகூலத்தை ஏற்படுத்தும். செய்தொழில் அல்லது உத்தியோகம் திறம்பட நடந்துவரும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

### 12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.
(தி. து. ஸ. ச. த. – தே. தோ. ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் இம்மாதம் சுப பலன் தரும். பணச் செலாவணி திருப்திகரமாக இருந்துவரும். சகோதர சகோதரிகளுக்கு சௌக்கியத்தையும் மேன்மை ஸ்திதியையும் அளிக்கும். கிரக வாகன சௌகரியங்களில் நிம்மதி ஏற்படும். விவசாயத்தில் அபிவிருத்தி பலன் தரும். வியாபாராதி புத்திசாதுரிய லேவாதேவிகள் நன்றாக நடந்துவரும். புத்திரர்களின் கல்வி தொழில் துறைகளில் மந்த போக்காக இருப்பினும் பாதகம் வராது. ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம் பல ஏற்படும். செய்தொழில் அல்லது உத்தியோகம் சுறுசுறுப்பாக நடைபெறும். செவ்வாய் புதன் சுபமாகும்.